

# ஈஸ்வரி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்

## ஈஸ்வரி குரூப் நிறுவனங்கள்

4 எல்டாம்ஸ் ரோடு, முதல் மாடி,
ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி: 455349, 459557, 457583.




# டெபாசிட் திட்டங்கள்

**ஃபிக்சட் டெபாசிட்**

| காலம் | வட்டி விகிதம் (ஆண்டிற்கு) | குறைந்த பட்ச டெபாசிட் தொகை |
|---|---|---|
| 1 ஆண்டு<br>2 ஆண்டு<br>3 ஆண்டு | **24%** | ரூ. 10,000/- |

ஊக்கத்தொகை 1%

**க்யூமுலேடிவ் டெபாசிட்**

| காலம் | டெபாசிட் தொகை | முதிர்வுத்தொகை | வருடாந்தரவட்டி | ஊக்கத்தொகை |
|---|---|---|---|---|
| 13 மாதம் | ரூ.10,000/- | ரூ.13,000/- | 27.70% | 1.5% |
| 25 மாதம் | ரூ.10,000/- | ரூ.16,000/- | 28.80% | 3.0% |
| 37 மாதம் | ரூ.15,000/- | ரூ.30,000/- | 32.4% | 4.5% |

| ஈஸ்வரி பாண்ட் | திருமலா பாண்ட் |
|---|---|
| குறைந்த பட்சத்தொகை | குறைந்த பட்சத்தொகை |
| ரூ.25,000<br>இரு மடங்காகிறது<br>37 மாதங்களில்<br>ரூ.50,000/-<br>ஊக்கப்பரிசு | ரூ.50,000<br>மும் மடங்காகிறது<br>60 மாதங்களில்<br>ரூ.1,50,000/-<br>ஊக்கப்பரிசு |
| 4 கிராம் தங்கக்காசு | 8 கிராம் தங்கக்காசு |

கிளைகள்: பாரிமுனை ஃபோன்: 560767, தி.நகர் ஃபோன்: 825960, புரசைவாக்கம் ஃபோன்: 5324937, 5324940, குரோம்பேட்டை ஃபோன்: 405845
திருவல்லிக்கேணி ஃபோன்: 84187, நங்கநல்லூர் ஃபோன்: 2345891, சாலிகிராமம், ஃபோன்: 428650 பாண்டிச்சேரி ஃபோன்: 3830

எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்.

**உங்கள் வளர்ச்சி ஈஸ்வரியுடன் வளரட்டும்!**

## நீர்மோர்

தெருவுக்குத் தெரு
நீர்மோர்ப் பந்தல்!

வெண்ணையெடுத்தது
யாரென்னும் விவரம் புரியாமல்
மோர்குடித்து மயங்குகிறான்....
அப்பாவித் தமிழன்!

தண்ணீர்ப் பந்தல்
அன்று......
மானுட தர்மம்
இன்று.....
தேர்தல் மர்மம்!





## பானகம்

அரை டம்ளர் தண்ணீரில்
ஐந்து பைசா வெல்லம் கரைத்து
அம்மாவுக்குத் தெரியாமல்
அடிக்கடி குடித்ததுண்டு....

நாட்டாமை வீட்டுப் பானகம் போல்
நானெங்கும் குடித்ததில்லை

கங்கையம்மன் திருவிழாவிலும் -
பெண்ணழைப்பின் போதும் -
பானகம் குடித்த ஈரம்
பசுமையாய் இனித்திருக்கும்!

வேலுச்சாமி விரட்டும்போது
'பசங்களுக்குக் கொடுடா'
- பரிந்துரைக்கும் நாட்டாமை!

பட்டணம் வந்த பின்னும்
பானகம் தயாரிக்கிறேன்....
ஏலக்காய் சுக்கு இட்டு வைத்துச் செய்தாலும்
கார்ப்பரேஷன் தண்ணீர்
காட்டிக் கொடுத்து விடுகிறது!

நா.வே. அருள்

## பதநீர்

ஏழையின் இளநீர்.

கூடை அரசவையில்
குருத்தோலை மகுடமுடன்
பானைக்குள் பவனிவரும்
பனைமரத்து இளவரசி

அது சரி
கள்ளில் சுண்ணாம்பு கலந்தால்
பதநீராகிறது
மனத்தில் எதைக் கலந்து
மனிதனாவது?.....



# லல்லு போட்ட நாடகங்கள்!

சமூகப் பணி. 1977 ஜனதா அலை வீசிய போது சட்ட மன்ற உறுப்பினராகும் சந்தர்ப்பம். அப்புறம் அரசியலில் 'மிதந்து' கொண்டிருந்து விட்டு 1990ல் ஜனதாதள முதல்வர்!

“நான் ஆட்சிக்கு வந்தால் பள்ளம், மேடாக உள்ள பீகார் சாலைகளை ஹேமமாலினியின் கன்னம் போல் வழ வழப்பாகப் போடுவேன்” என்று சொல்லி ஹேமமாலினியின் கணவர் தர்மேந்திராவிடம் மாட்டிக் கொண்டார், லல்லுபிரசாத் யாதவ். 'அப்புறம், 'ஹேமா என் சகோதரி போல' என்று அசடு வழிந்தார். தடாலடியான அறிக்கைகள், பேச்சுக்கள் லல்லுவிடம் நிறையவே உண்டு. ஆனால் எதிர்ப்புகள் வரும் பட்சத்தில் பல்டி அடிக்கத் தயங்க மாட்டார்.

பீகார் அரசியலில் போட்டியாளர்களை வீழ்த்திவிட்டு, ஹீரோவாக நிலைத்து நிற்க சகலவித கல்யாண குணங்களும் தேவை. அத்தகைய குணங்கள் அனைத்தும் நிறைந்தவர் தான் லல்லு. கிராமத்துப் பள்ளியில் படிப்பு. குடும்பத்துக்குச் சொந்தமான சொற்ப நிலத்தில் விவசாயம். துவக்க காலத்தில் லோஹியாவின் சோஷலிஸ கொள்கைகளால் கவரப்பட்டு, எமர்ஜென்ஸிக்கு முந்தைய காலகட்டங்களில் ஜெயப்பிரகாஷ் நாராயணனின் 'முழுப் புரட்சி' இயக்கத்தில் பங்கு கொண்டவர் லல்லு. எமர்ஜென்ஸியில் சிறைவாசம். பீகார் பூகம்பத்தின் போது முழுமையான

கடந்த ஐந்து வருடங்களில் பீகாரில் எந்தவித முன்னேற்றமும் கிடையாது. மின் உற்பத்தி குறைந்து போயிருக்கிறது. 20,000 கொலைகள் நடந்திருக்கின்றன. இரவு ஏழு மணிக்கே மார்க்கெட்டுகள், கடைகள் பூட்டப்படுகின்றன. உள்ளாட்சி ஊழியர்கள், ஆசிரியர்களுக்குப் பல சமயங்களில் சம்பளம் தரத் தட்டுப்பாடு ஏற்பட்டுள்ளது. ஆனாலும் மக்களின் அமோக ஆதரவைப் பெற்று மறுபடி முதல்வராக வர முடிந்தது என்றால் எதனால்? அவர் மாடி வீட்டுத் தலைவராக இராமல் மக்கள் தலைவராகவே தொடர்ந்து இருப்பதுதான் காரணம்!

பதவிகளில் இல்லாத சமயங்களில் பாட்னாவில் உள்ள அண்ணன் வீட்டிலேயே வாசம். அண்ணன் இன்னமும் பாட்னா பல்கலைக் கழகத்தில் ஒரு சாதாரண பியூன் தான். லல்லுவுக்கு வஞ்சனையில்லாமல் ஒன்பது குழந்தைகள். மூத்த மகள் மாஸா, ஜாம்ஷெட்பூர் மருத்துவக் கல்லூரியில் படிக்கிறார். மீதம் உள்ள எட்டுப் பேரில் நால்வர் ராஞ்சியிலும், நால்வர் பாட்னாவிலும், கான்வென்டுகளில் படிக்கிறார்கள். மனைவி ரப்பராய் தேவிக்கு, கணவனின் அரசியலைப் பற்றியோ நாட்டு நடப்பைப் பற்றியோ ஒன்றும் தெரியாது. "பகல் உணவில் கண்டிப்பாக மீன், நண்டு, நத்தை இருக்க வேண்டும்" என்கிற கணவரின் ஆசையை மட்டும் தவறாமல் நிறைவேற்றத் தெரியும்! "நான் திடமாக இருப்பதற்குக் காரணம் இந்த உணவுதான்" என்கிறார் லல்லு.

முதல்வர் பங்களாவில் சுமார் ஒரு

ஏக்கரில் நெல், காய்கறிகள் பயிரிட்டிருக்கிறார். காலையில் எழுந்தவுடன் 'கைனி' (சுண்ணாம்பு புகையிலை கலவை)யை வாயில் அடக்கிக் கொண்டு தோட்டத்தை வலம் வருகிறார். விடுமுறை நாட்களாக இருந்தால் தொழுவத்தில் பால் கறக்கிறார். எந்த ஒரு சமயத்திலும் ஒரு டஜன் ஆடுகள் முதல்வர் பங்களாவில் தயாராக இருக்கும்.



தலைபோகிற வேலை எதுவாக இருந்தாலும் சூரிய அஸ்தமனத்துக்குப் பிறகு அலுவலகத்தில் உட்காருவதில்லை. வீட்டிற்கு வந்தவுடன் குழந்தைகளுடன் விளையாடுவதற்கு நேரம் ஒதுக்கி விடுகிறார். நாட்டுப்புறக் கலைகளில் ஈடுபாடு.

ஜனதா தளக் கட்சியில் 1992-ல் வழக்கமான ஒரு பிளவு. பெரும்பான்மை இல்லாமல், கம்பி மேல் நடப்பது போல் பீகாரில் ஆட்சி செய்து கொண்டிருந்த லல்லு பிரஸாத் யாதவ் கவிழ்க்கப்படுவார் என்று பரவலாக எதிர்பார்க்கப்பட்டது. அந்தச் சமயத்தில் தமக்கு மக்கள் மன்றத்தில் உள்ள ஆதரவை நிரூபிக்கும் பொருட்டு, பாட்னா காந்தி மைதானத்தில் ஒரு பெரிய்ய்ய்ய பேரணியை நடத்திக் காட்டினார் லல்லு. 'அதற்கு முன்னாலும் சரி, பின்னாலும் சரி, அதுபோன்ற ஒரு பேரணியைப் பாட்னா கண்டதில்லை' என்று இன்னமும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அந்தப் பேரணியில் கிருஷ்ணர் வேடத்தில் தோன்றிய லல்லு, "இன்னமும் இருபது வருடங்களுக்கு பீகார் முதல்வர் நான்தான்" என்று முழங்கினார்! இருபது வருடங்கள் ஆள்கிறாரோ இல்லையோ அடுத்த ஐந்தாண்டுகளுக்கு, அறுதிப் பெரும்பான்மையோடு தேர்ந்தெடுக்கப்பட்டு வெற்றிப் புன்னகை புரிந்து கொண்டிருக்கிறார் லல்லு. பீகாரில் கடந்த முப்பது வருடங்களில், பதவிக் காலத்தை முழுமையாக முடித்து அடுத்த தேர்தலிலும் வென்றிருப்பவர் லல்லு ஒருவர்தாம்.

லல்லுவுக்குப் பின் தங்கிய முஸ்லீம் மக்களிடையே ஏகோபித்த ஆதரவு. காரணம், அயோத்தி சம்பவத்துக்குப் பின்னர் பீகாரில் கலவரம் நடக்காமல் கவனித்துக் கொண்டதுதான். தாம் டூர் போகும் சமயங்களில் கூடவே ஃபயர் இன்ஜினை கூட்டிக் கொண்டு போய் கிராமத்துச் சிறுவர்களைக் குளிக்கவைக்கிறார்! முடிவெட்ட ஏற்பாடு செய்கிறார். மாடு மேய்க்கும் சிறுவர்களுக்குப் படிப்பு சொல்லித் தர தனித் திட்டம் உண்டு. எட்டாம் வகுப்பு பாடப் புத்தகத்தில் லல்லுவை காந்திக்கும், நேருவுக்கும் சமமாக வைத்து எழுதப்பட்டிருக்கிறது! போதாதோ?

ஊஹூம்! மக்களைக் கவரும் நாடகத்தில் புதிய புதிய காட்சிகள் கற்பனை செய்து அரங்கேறிக் கொண்டே இருந்தால்தானே நீடித்து நிலைக்க முடியும்!

- ப்ரியன்

---

தவிர பிரசுரத்துக்கு, ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 150 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி : ஜூன் 15**

போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 6 ஆண்டு மலரில் பிரசுரமாகும்

மேலும் விவரங்களுக்குச் சென்ற இதழ் கல்கி பார்க்கவும் அல்லது அடுத்த இதழுக்குக் காத்திருக்கவும்.



# டீ.வி. தொடர்களும் வேதாளத்தின் வெற்றியும்!

தன் முயற்சியில் சற்றே மனம் தளர்ந்த விக்கிரமன் சீறினான் :

"நைனா வேதாளம்! போதும் நீ கதை சொல்லிக் கிழிச்சது. என் தலை சிதறினாலும் சரி. டீ.வி. பற்றி நான் கேக்கற கேள்விங்களுக்கு மருவாதியா பதில் சொல்லிரு. உனக்காச்சு, எனக்காச்சு, ஒண்டிக்கு ஒண்டி வரியா?"

வேதாளம் மிரண்டது. விக்கிரமனின் திடீர் வீரம் கலங்க அடிக்க, "சர்தான், கேட்டுப் பாரு!" என்றது.

"அப்படி வா வழிக்கு! இந்தா மொத கேள்வி. 'நம்ம அண்ணாச்சி'ன்னு ஒரு படம் தெரியுமில்லை? எனக்கும் அந்தப் படத்துக்கும் என்ன சம்பந்தம்?"

"அந்தப் படம் ஓடின தியேட்டர்ல டிக்கெட் கீசிருப்பே!"

"கய்தே! யோசிச்சி சொல்லு. சமாசாரம் டீ.வி. பத்தி."

"தெரியல துரை!"

"விக்கிரமாதித்தன் கதை மாதிரி ஜெயின் டீவில வாரத்துக்கு நாலு தபா, பார்ட் பார்ட்டா அதே படம் காட்றாங்க நைனா."

"அப்படியா?"

"பேச்ச மாத்தாத. மூத கேள்வி தப்பா சொல்லிட்ட. அடுத்தது. உங்கம்மா கைல ஒரு ஈ உக்கார்ந்துக்குது. உங்க மாமியார் மூக்குல கொசு உக்காந்துக்குது. எதை மொதல்ல ஓட்டுவ?"

இந்த இடத்தில் வேதாளம் பக பகவென்று சிரிக்க, விக்கிரமாதித்தன் பேய் முழி முழித் தான்.

"எங்கம்மாளுக்கும் மாமியாளுக்கும் ஏதுய்யா மூக்கும் கையும்?"

"தபார்! டபாய்க்காத! மருவாதியா சொல்லிரு. இல்ல, தெரியாததை ஒத்துக்க."

"பூச்சி ஒழிப்பு விளம்பரமா?"

"ஐயே, அதெல்லாம் நல்லாருக்கும் வேதாளம். இது சன் டீவி ஜோடிப் பொருத்தம் சமாசாரம். இதே டைப்புலதான் கேக்கறாங்க. புருசன் - பொஞ்சாதி ரெண்டு பேரும் ஒரே பதிலை கரீட்டா சொல்லிட்டா சிறந்த ஜோடின்னுடறாங்க."

"தபார்றா!"

"ஊத்திக்கினியா? தபாரு நீ தேர மாட்ட. ஒரு பதில் உருப்படியா சொல்லலை! நானே கேள்வி கேட்டு, நானே பதில் சொல்லிடறேன். கேட்டுக்க, கம்முனு. ஸ்கிரீன்ல ஒருத்தன் பட்டாணி தின்னறான். அடுத்த ஷாட்டு, ஒரு வெள்ளக்காரி செவுர எட்டி ஒதிக்கறா. மூணாவது ஷாட்டுல ஒரு பாகவதர் நடந்து

போறாரு. நாலாவதுல ஒரு நாய்க் குட்டி டான்ஸ் ஆடுது...''

''எடிட்டிங் மிஸ்டேக்கா இருக்கும் வாத்யாரே!'' என்று குறுக்கிட்டது வேதாளம்.

''கெட்டுது போ. இது எம்.டி.வி. ஸ்பெசல் நைனா! உடு. டாப் டக்கர், சூப்பர் இட் மூகாபுலா, பிலிப் டென், பெப்சி உமா சாய்ஸு - இப்படி ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் எட்டு பாட்டு வந்தா மொத்தம் எத்தனை பாட்டு பாக்க முடியும் தெரியுமா?''

''மூப்பத்திரண்டு!''

''தப்பு! ஒரே பாட்டை எல்லா நிகழ்ச்சியிலும் பார்த்தாகணும்!''

''கஷ்டம்டா!''

''அதுக்குத்தான் நீ பதில் சொல்லாத கம்முனு கிடன்னேன். வினாடி வினா நிகழ்ச்சியில மூணு டீம் கலந்துக்கிட்டா எதுக்கு ப்ரெய்ஸ் கிடைக்கும் தெரியுமா? உம்முனு அரை மணி நேரமும் சும்மா குந்திக்கினு கெடந்தா தேர்டு. சும்மா அங்க இங்க அசஞ்சி, கொட்டாவி உட்டா செகண்டு. தப்பித் தவறி ஒண்ணு ரெண்டு கரீட்டா சொல்லிட்டா பஸ்ட்டு!''

''என்னிய சேத்துப்பாங்களா?''

''கேட்டுச் சொல்றேன். ஜுனூன்ல எந்த கேரக்டருக்கு இன்னும் பிளாஷ்பேக் காட்டலை தெரியுமா? ஒரு நாய் வருது! அதான் பாக்கி!''

''அட, தமாஷா கீதே!''

''கேளு. 'தர்த்'னு ஒண்ணு வருது. 'அன்பைத் தேடி'ன்னு சொல்லி - நீனா குப்தா, புருஸனை டீல்ல வுட்டுட்டு வேற ஒருத்தனை புட்சிக்கறது... அதுவரைக்கும் காட்டிக்கிறாங்க. இப்ப என்னா டெவலப் மென்ட்டு இருக்கும்னு நினைக்கிற?''

வேதாளம் சட்டென்று, ''ஒரு டெவலப் மென்ட்டும் இருக்காது. இன்னும் ஆறு மாசத்துக்கு இதையே பப்பிள் கம்மா இஸ்துரு வாங்க'' என்றது.

''போடு, தூள் மாமே!'' என்றான் விக்கிரமன்.

சரியான பதில் சொல்லி விட்டதனால் வேதாளம் ஜிவ்வென்று கிளம்பி மரத்தில் ஏறிக் கொண்டு, ''ஏன்யா... இத்தனாம் பெரிய பட்டியல் போட்டுக்குனு பொலம்பறியே... உன்ன யாரு இதையெல்லாம் பாக்கச் சொன்னது? ஊட்ல பொண்டாட்டிய கொஞ்சிக்கினு குஸாலா இருக்க வேண்டியதுதானே...'' என்றது.

''ஹி... ஹி... வரட்டா'' என்று வழிந்தபடி திரும்பினான் விக்கிரமன்.

— குல்லு

# உங்கள் முதலீட்டை பன்மடங்காக பெருக்கிட பல கோடி நிதி கொண்ட நிறுவனத்தை தேர்ந்தெடுப்பீர்...




# ஃபைனான்ஸ்

SSM ஃபைனான்ஸ் முனைப்பான SSM குரூப் கம்பெனிகளின் ஓர் அங்கம்.

SSM குரூப்பின் முன்னணி நிறுவனமான டேன்இந்தியா நூற்பாலை, துணி தயாரிப்பு, துணி பதனிடும் ஆலை, சிமெண்ட் ஃபாக்டரி, மருந்து பொருட்கள் தயாரிக்கும் சார்பிட்டால் ஆலை, தோல் பதனிடும் இரசாயனம் தயாரிக்கும் ஆலை, SSM Mills என்னும் நிறுவனம் உயர்ரக பிளவுஸ், வேஷ்டிகள் மற்றும் யூனிபார்ம் துணிகளை தயாரித்து விற்பனை செய்தல், ப்ளான்டேஷன்ஸ், டிரான்ஸ்போர்ட், மைன்ஸ், க்ரானைட்ஸ், ஃபைனான்ஸ் ஆகிய துறைகளில் ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக தன் நேர்மையான செயலாற்றலின் மூலம், மக்களின் நம்பிக்கையையும் மற்றும் நன்மதிப்பையும் பெற்று தனக்கென ஒரு தனி இடத்தை உருவாக்கிக் கொண்டுள்ளது.

இந்நிறுவனத்தின் ஓர் அங்கமான SSM ஃபைனான்ஸ், தன்னுடைய வாடிக்கையாளர்களுக்கு கூடுதல் வட்டித் தொகை மற்றும் சேவை புரிய ஏற்படுத்தப்பட்டுள்ளது. நீங்களும் இந்த வெற்றிகரமான நிறுவனத்தின் அங்கத்தினராவீர்.

# Kalki Shopping Page

## RANI SAREES
**MADURAI - 12**
**R.A.M**

இந்தத் துணி லேபிலை கவனித்து வாங்குங்கள்.

**பெங்கால் காட்டன் சாரீஸ் நிறைய கலர்கள் நிறைய டிசைன்கள் 10% தள்ளுபடி உண்டு.**

மதுரை டெக்ஸ்டைல்ஸ்
2, சிவப்பிரகாசம் ரோடு,
பாண்டிபஜார்,
சென்னை - 17
(காய்கறி மார்கெட் அருகில்)



ADYAR
## STUDENTS XEROX

*Quality that is close to perfection*

**XEROX**
**LASER PRINTING**
**WORD PROCESSING**
**DTP**
**ELECTRONIC & MANUAL TYPING**
**BINDING & LAMINATION**

ஸ்ரீ ராமபிரானுக்குப் பாலம் அமைக்க சின்னஞ்சிறு அணிலும் மண் சுமந்தது. உங்கள் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பாலம் அமைக்க நாங்களும் உதவ முடியும்.

# நடராஜ்

வழங்குகிறது

**தமிழ்ப்புத்தாண்டு சிறப்புச் சலுகைகள்**

1 வருடத்துக்கு ரூ.10,000 டெபாஸிட் செய்வோருக்கு ஒரு கிராம் தங்க நாணயம் உடனடியாக பரிசளிக்கப் படுகிறது. (வழக்கமான பரிசுகளும் உண்டு)

90 நாட்கள் 180 நாட்கள் 1 வருடம் 2 வருடம் 3 வருடம்

**24% P.A +4% GIFT +1% PENSIONERS**

■ 90 நாட்களுக்குப் பிறகு ரினிவல் உண்டு. ■ ஒவ்வொரு ரினிவலுக்கும் GIFT. ■ ரூ.12,000 டெபாஸிட் செய்து 3 சவரன் தங்கம் பெறலாம். ■ 36 மாத இரட்டிப்புத் திட்டம் ■ தவணையில் பண்ணை வீடு. ■ சீட்டு குரூப்பில் 'லோன்'.

**Phone: 4342098, 4840150**



**NATARAJ FINANCE INVESTMENTS**
NATARAJ CHITS(TAMILNADU) Pvt. Ltd.
NATARAJ ESTATE-FARM HOUSE PROMOTERS
'Shanthi Complex', 3rd Floor, 26-Ranganathan St., T. Nagar, Madras- 17.
B.O. 1-B, Kamarajar Road, Kancheepuram-1.

adchoice

★ ஆயில் மில்ஸ் ★ ஏற்றுமதி ★ புத்தக வெளியீடு (சித்திர ராமாயணம் - தமிழ், இந்தி, இங்கிலீஷ்.) மற்றும் பல வளர்ச்சித் திட்டங்கள்.

# ஜில்லென்று தொடங்கிச் சூடான பட்டிமன்றம்!

'எரிக்கின்ற வெயிலை எதிர்க்கச் சிறந்தது ஏசியா? கூலிங்கிளாஸா? ஐஸா?' வெயிலுக்கு இதமாக இப்படியொரு பட்டி மன்றம் நடத்தினோம். அதில் ஏசி என்னும் செல்வந்தர், கூலிங்கிளாஸ் என்னும் கல்லூரி மாணவர், ஐஸ் என்னும் சாமானியர் ஆகிய மூவரும் கலந்து கொண்டு தங்கள் வாதங்களை முன்வைத்தார்கள்.

நடுவர் யார் என்கிறீர்களா? சாட்சாத் நீங்களேதான். அவர்கள் எடுத்து வைக்கும் வாதப் பிரதிவாதங்களைப் பரிசீலனை செய்து, எதெதற்கு எவ்வளவு மார்க் போடலாம் என்பதை நீங்களேதான் தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.



## ஏ.சி :

இப்படியொரு தலைப்பும் விவாதமும் அர்த்த மற்றது என்பதுதான் என்னுடைய வாதம். ஏனெனில் வெளியில் சகட்டு மேனிக்கு வெயில் ஏறிக் கொண்டே இருந்தாலும் அறையின் வெப்ப நிலையை 16லிருந்து 18 டிகிரி சென்டிகிரேடிலேயே ஜில்லென்று வைத்திருப்பது நான்தான். ஆஸ்துமா காரர்கள் கூட என்னுடைய ஜில்லிப்பில் இருப்பதுதான் நல்லது என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். நான் இருக்கும் அறைகளில் எட்டு மணி நேரமென்ன, பத்து மணி நேரம் தொடர்ந்து வேலை செய்பவர்கள் கூட வீட்டுக்குத் திரும்பும் போது களைப்பின் சுவடே தெரியாத புத்துணர்ச்சியோடுதான் செல் கிறார்கள். எனவே, 'ஏ.சிக்கே உங்கள் வோட்டு; அதையே வாங்கி மாட்டு' என்று கூறிக் கொண்டு எனது உரையை முடிக்கிறேன்.

## கூலிங்கிளாஸ் :

நண்பருக்கென்ன, சுலபமாகச் சொல்லி விட்டார், 'வோட்டு, மாட்டு'



என்று கேட்பதற்குச் சுவாரஸ்யமாக! ஆனால், அது பர்ஸுக்கு வைக்குமே வேட்டு என்பதை அப்படியே மூடி மறைத்து விட்டார். நான் கேட்கிறேன் ஏசி என்ன ஓசியில் கிடைக் கிற விஷயமா? ஒரு சாதாரண அறையை ஏசி செய்ய வேண்டுமானால் குறைந்தபட்சம் ஒரு டன் அளவுள்ள ஏசியாவது வாங்க வேண்டி யிருக்கும். அதற்கு என்ன செலவாகும் தெரியுமா? சராசரியாக 25,000 ரூபாய்! ஒரு சராசரிக் குடும்பத்தாருக்குக் கட்டுபடியாகிற விஷயமா இது? சரி, இதைக் கூட தவணை முறையில் வாங்கி விட முடியும் என்று வைத் துக் கொண்டாலும் ஒரு மணிக்கு இரண்டு யூனிட் மின்சாரம் செலவாகுமே? அதற்குப் பணம் கட்ட எங்கே போவது? ஆனால் என்னைப் போன்ற கூலிங்கிளாஸ்கள் செலவே வைப்பதில்லை. கூலிங்கிளாஸ் கூட ஏழாயிரம்



எட்டாயிரம் என்று விலையாகிறதே என்று ஏசி நண்பர் ஒரு சொத்தை வாதத்தை வைக்கக் கூடும்... அதெல்லாம் பணத்தை வைத்துக் கொண்டு எப்படிச் செலவழிப்பது என்று தெரியாமல் தடுமாறுபவர்களுக்குத் தானே தவிர, சாதாரண மக்களுக்கல்ல. ரொம்பவும் சாதாரண மாணவர்கள் கூட முந்நூறு, நானூறு ரூபாய் செலவழித்தால் போதும் ஒரு நல்ல கூலிங் கிளாஸை வாங்கிக் கொண்டு விட முடியும். அதன் மூலம் கண்களை அல்ட்ரா வயலட் கதிர்களிலிருந்து காப்பாற்ற முடியும். கண்களைச் சுற்றி விழும் கருவளையங்களிலிருந்தும் உங்கள் கண்களைக் காப்பாற்றிக் கொள்ளலாம். இதையெல்லாம் விடுங்கள், உங்கள் முகத்திற்குத் தகுந்த பிரேம்களைத் தேர்ந்தெடுத்து என்னை அணியும் போது உங்களை ஒரு சினிமா ஸ்டார் போன்ற கெட்அப்பில் மாற்றுகிறேனே... இதைவிட வேறு என்ன சிறப்பு வேண்டும்?

## பாவம் கருணாகரன்!

முந்நாள் முதல்வர் கருணாகரனை
மார்ச் 16-ந் தேதி மாலை 4.30க்குள் ராஜி
னாமா செய்யும்படி மேலிடம் உத்தர
விட்டது. ஆனால் இரவு 9.00 மணிக்கு
அதைக் கொடுத்தால் மீண்டும் முதல்
வராக வாய்ப்பு அதிகம் என்று ஜோதிடர்
சொன்னதால் அதுவரை இழுக்கடித்து
எல்லோருக்கும் டென்ஷனை ஏற்படுத்தி
னார். 22-ந் தேதி காலை அந்தோணி
பதவியேற்பதாக இருந்தது. அப்படிச் செய்
தால் அவர் நிலைத்து விடுவார் என்று
மீண்டும் ஜோதிடர் கூற, கருணாகரன்
தாம் காலையில் குருவாயூர் போக
வேண்டுமென்றார். அந்தோணி ஒப்புக்
கொண்டு மாலை 4.30க்குப் பதவியேற்
றார். கருணாகரன் இரவு ஜோதிடரைச்
சந்தித்த போது, "போச்சு. அது அந்தோ
ணிக்கு இன்னும் யோகமான நேரமாகும்.
தவிர, பட்டாபிஷேகத்தின் போது மழை
பெய்தால் ராஜா நீண்ட காலம் பரிபால
னம் செய்வார் என்பது சாஸ்திரம். இத்
தனை நாட்கள் இல்லாமல் அந்த நேரம்
பார்த்துதானா அரை மணி நேரம் மழை
பெய்ய வேண்டும்?" என்றார் ஜோதிடர்.
கருணாகரன் இடிந்து போய் உட்கார்ந்
திருக்கிறார்.

- "டெக்கான் ஹெரால்ட்"
- அ. ஷண்முகசுந்தரம்



## ஐஸ் :

இந்த ஆயிரங்களாகட்டும் அல்லது சில நூறுகளாகத்தான் இருக்கட்டும்... இவை இரண்டுமே ஏழைகளுக்கு எட்டுகிற சமாசாரமா என்ன? வெயிலில் அலைந்து நாக்கு வறளும் போது, நான்கு ரூபாயோ ஐந்து ரூபாயோ செலவழித்தோமா ஒரு கூல்டிரிங்கைக் குடித்து ஜில்லென்று ஆனோமா என்று இருக்க வேண்டாமா? இதற்கு என்னை விட்டால் வேறு யார் இருக்கிறார்கள்? ஏசியின் மகிமை எட்டாத உயரமென்று சொன்னாரே நண்பர்... உண்மையில், யாரும் ஏசி அறைக்குள்ளேயே 24 மணி நேரமும் இருந்து விடுவதில்லை. அடிக்கடி வெளியில் வந்து போகத்தான் வேண்டியிருக்கிறது. அப்படி வெளியே வரும் போது திடீரென்று அதிக வெப்பத்தை (blow hot) எதிர்கொள்ள வேண்டியிருப்பதாலும் பிறகு மீண்டும் உள்ளே போகும் போது திடீரென்று அதிக குளிர்ச்சியை (blow cold) எதிர்கொள்ள வேண்டியிருப்பதாலும் சிலருக்கு உடல்நிலை பாதிக்கப்படுகிறதே... அது எந்தக் கணக்கில் சேர்த்தி என்று கேட்கிறேன்! இதே மாதிரி, விஷயம் தெரியாத சிலர், பிளாட்பாரக் கடைகளில் தரங்குறைந்த கூலிங்கிளாஸ்களை வாங்கி அணிந்து கொள்கிற போது கண் பார்வைக்கே ஆபத்து ஏற்படும் சூழ்நிலையும் இருக்கிறதே!

## ஏசி, கூலிங்கிளாஸ் (இருவரும் ஒரே நேரத்தில் பேசுகிறார்கள்) :

ஐஸ் வைத்துப் பேசும் ஐஸுக்கு மட்டும் கெட்ட குணங்கள் இல்லையா என்ன! வெயிலில் வறண்டு சூடாக இருக்கும் தொண்டையில் திடீரென்று ஐஸ் போட்ட குளிர் பானங்களைக் குடிக்கும் போது - அந்தச் சமயத்தில் அது இதமாக இருந்தாலும் - அந்தத் திடீர் குளிர்ச்சி காரணமாகத் தொண்டையை வைரஸ் கிருமிகள் பாதிக்க வாய்ப்புள்ளதை ஏன் மூடி மறைக்க வேண்டும்? ஐஸ் கட்டிகளைத் தயாரிக்கப் பயன்படுத்தப்படும் தண்ணீரைக் கூட காய்ச்சி ஆற வைக்க வேண்டும் என்கிற டாக்டர்களின் ஆலோசனையை எத்தனை பேர் கடைப்பிடிக்கிறார்கள் என்று சோதனை செய்தா குளிர் பானங்களைக் குடிக்க முடியும்? எனவே....

***(இதைக் கேட்டு ஐஸுக்குக் கோபம் வர, அவரும் எழுந்து நின்று பேச ஆரம்பிக்கிறார். அப்புறம் என்ன? சட்டசபை மாதிரி பட்டி மன்றமும் மாறி விட்டது!)***

— நிர்மலா சக்ரவர்த்தி

தப்பிக்க ஏதாவது ஓட்டை அகப்படாமலா போகும்!

சு.சுவாமி

ஜெ

ஆளுநர்

வழக்குத் தொடர அனுமதி




1995 ஏப்ரல் 16
யுவ சித்திரை 3
மலர் : 53
இதழ் : 37

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்




## ராஜினாமா செய்யும் துணிவு ஜெயலலிதாவுக்கு உண்டா?

'பதவியைத் துஷ்பிரயோகம் செய்து, மோசடி பண்ணி, மக்கள் சொத்தைச் சட்டத்துக்குப் புறம்பாக அபகரித்திருக்கிறார்' என்று ஜெயலலிதா மீது வழக்குத் தொடர சு.சுவாமிக்கு ஆளுநர் அனுமதி வழங்கியிருக்கிறார்.

'இது ஏதோ அரசியல்ரீதியான பழிவாங்கும் படலம்' என்று பிரசாரம் செய்யப் படுவது முழுப் பூசணியைச் சோற்றில் மறைக்கும் காரியம். சக்திவாய்ந்த மக்கள் தலைவர் மீது வழக்குத் தொடர அனுமதி வழங்கு முன்னர் ஒரு தடவைக்கு ஓராயிரம் தடவை யோசித்த பிறகுதான் ஆளுனர் செயல்பட்டிருப்பார். நாளைக்கு முதல்வர் குற்றமற்றவர் என்று நிரூபணமானால் ஆளுனருக்கு அவமானம் மட்டுமல்ல, அவர் எதிர்காலமே கேள்விக்குறியாகிவிடும். எனவே, ஓராண்டுக்கும் அதிகமாக நன்கு யோசித்து உறுதியான ஆதாரங்கள் இருப்ப தால்தான் அனுமதி வழங்கியுள்ளார் என்று நம்பலாம்.

பார்க்கப் போனால் ஆளுனர் இவ்வளவு தாமதம் செய்ததுதான் ஆச்சர்யம். டான்ஸி விவகாரத்தில், நிலக்கரி இறக்குமதியில், இன்னும் பலவற்றில் குற்றங்கள் பல நடந்திருப்பது ஊர் அறிந்த செய்தி. எதிர்க்கட்சியினர் பலரும்




ஐயம்திரிபுக்கு இடமின்றி எடுத்துக்காட்டியுள்ள ஆதாரங்கள் உள்ளன. என்றாலும் ஆளுனர் அவசரப்படாமல் யோசித்துச் செயல்பட்டதோடு, சிந்தித்துத் தர்ம நியாயமாக நடந்து கொண்டிருப்பதாகக் காண்பித்துக் கொண்டும் இருக்கிறார் - தாமதத்தின் மூலம்.

வழக்குத் தொடர அனுமதி வழங்கப்பட்டதுமே சட்டமன்ற ஆளும் கட்சிக் கூட்டம் நடத்தி, தாம் விலகிக் கொண்டு புதிய தலைவரை - முதல்வரை - தேர்ந்தெடுக்குமாறு கோரி, அவருக்குத் தம் முழு ஆதரவை அளிப்பதே ஜெ. கடைப்பிடிக்க வேண்டிய ஜனநாயக நல்மரபு. இதைச் செய்த பிறகு, 'வழக்கைச் சீக்கிரம் நடத்துங்கள்; என்னைக் குற்றமற்றவளாக நிரூபித்துக் கொண்டு மறுபடி நான் முதல்வர் பதவி ஏற்க வேண்டும்' என்று கேட்பது கம்பீரம். ஆனால், அத்தகைய துணிவு இல்லாத முதல்வர், பதவியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருப்பதோடு, அந்தப் பதவியைப் பயன்படுத்தியே பதவியைக் காப்பாற்றிக் கொள்ளவும் முயற்சி செய்கிறார்.

"வழக்கு, மாநில அரசு மீதானது அல்ல; முதல்வர் மீது தனிப்பட்ட வழக்குத் தொடரவே அனுமதி வழங்கப்பட்டுள்ளது; அவ்வாறிருக்க முதல்வர் அரசு இயந்திரத்தைத் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளப் பயன்படுத்துவது குற்றம்" என்று எஸ்.ஆர்.பி. எடுத்துக் காட்டியுள்ளதில் நிரம்ப நியாயம் உண்டு.

● *முதல்வர், பதவியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருப்பதோடு, அந்தப் பதவியைப் பயன்படுத்தியே பதவியைக் காப்பாற்றிக் கொள்ளவும் முயற்சி செய்கிறார்.* ●




- முதல்வர் பதவியில் நீடித்தால் ஆவணங்கள் அவருக்குச் சாதகமாகத் திருத்தப்படலாம் அல்லது காணாமல் போகலாம் என்ற சந்தேகங்கள் வலுவானவை.

"முதல்வரை ராஜினாமா செய்யுமாறு வற்புறுத்தி, அவரை விசாரிக்கத் தனி கோர்ட் நியமிக்க வேண்டிய கடமை பிரதமருக்கு உண்டு" என்று சு.சுவாமி எடுத்துக்காட்டுவதிலும் தார்மிக ரீதியிலான, சட்ட ரீதியிலான நியாயங்கள் இருக்கின்றன. ஆனால் தமது கையே கறை படிந்திருப்பதாலோ, அல்லது தமது கட்சி - ஆட்சி இவற்றின் பலவீனத்தை உணர்ந்திருப்பதாலோ, அதற்கான துணிவைப் பெறாத நரசிம்மராவ், நழுவல் கொள்கையைக் கடைப்பிடிக்கிறார். முதல்வர் பதவியில் நீடித்தால் ஆவணங்கள் அவருக்குச் சாதகமாகத் திருத்தப் படலாம் அல்லது காணாமல் போகலாம் என்ற சந்தேகங்கள் வலுவானவை.

முதல்வர், பிரதமர் ஆகிய இருவருமே ஜனநாயக நல்மரபுகளைக் கடைப் பிடிக்காதபோது, வழக்கு இழுபறியாக நீடித்துக் கொண்டே போவதிலும், வழக்கு முடிந்து தீர்ப்பு வருமுன்னர் தேர்தலே வந்துவிடுவதிலும் வியப்பு ஏதுமில்லை. அநேகமாக அப்படித்தான் நடக்கும்.

தேர்தலில் மக்கள் வழங்கும் தீர்ப்பாவது நியாயமானதாகத் தோன்ற வேண்டு மெனில், எதிர்க்கட்சிகள் ஒன்றிணைந்தால்தான் உண்டு. அல்லாது போனால் வோட்டுக்கள் சிதறி, தமிழக மக்களும் அதர்மத்துக்கே துணை போவது போன்ற ஒரு மாயையை உருவாக்கிவிடும்.

# கலகல கோவை!

## கோவை டிக்ஷனரி

ரக்கிரி - கீரை
எகத்தாளம் - பரிகாசம்
சிறுக்கிணிக்கி - மயிர்கோதி
அப்பராணி - சூதுவாது தெரியாதவன்
அங்கராக்கு - மேற்சட்டை
கால்செராயி - டிராயர்
தொறப்புக்குச்சி - சாவி
நறுவுசா - சுத்தமாக
பதவல் - குப்பை மற்றும் வேண்டாத பொருட்கள்
ஒறம்பறை - உறவினர்
வளவி - வளையல்
சில்வானம் - சில்லறை




● கோவை மாவட்டத்தின் பல பகுதிகளில் இரவு நேரத்தில் பாம்பு, உப்பு, ஊசி என்ற வார்த்தைகளைச் சொல்ல மாட்டார்கள்! பாம்பு என்பதைக் 'கயிறு', 'சீலைக்கரை' என்றும் உப்பு என்பதை ருசிக் கல்லு என்றும் ஊசி என்பதை 'தைப்பான்' என்றும் கூறுவார்கள்!

● உப்பு, புளி ஆகியவற்றைக் கையில் கொடுக்காமல் கீழே வைத்து எடுத்துக் கொள்ளச் செய்வர். ஒருவருக்கொருவர் கரித்துப் புளித்துப் போய் விடாமல் இருப்பதற்காக இப்படிச் செய்வர்!

● சகோதரிகள் இருவர் ஒரே சமயத்தில் கர்ப்பமுற்று இருக்கும் போது, ஒருவரை ஒருவர் முதலில் சந்திக்கும் நேரத்தில், ஆளுக்கு ஒரு குடம் தண்ணீரோடு வந்து குடத்தோடு மாற்றிக் கொள்வார்கள்!

● பாகற்காய், சுண்டைக்காய், வேப்பம்பூ போன்ற கசப்பான பதார்த்தங்களை ஒருவருக்குக் கொடுக்க நேர்ந்தால் கூடவே ஒரு வெல்லக் கட்டியையும்



சேர்த்துக் கொடுப்பார்கள்.

● டி.வி.யில் அந்தக் குடும்பத்தினர் சினிமாப் படம் பார்த்துக் கொண்டிருந்தனர். வந்திருந்த விருந்தாளியும் உடன் இருந்தார். படம் முடிந்த பிறகு விருந்தாளி அந்த வீட்டு ஐந்து வயதுப் பையனிடம் கேட்டார், ''படம் எப்படியிருந்தது தம்பி...?'' அந்தச் சிறுவன் சொன்னான், ''என் ஆயுசிலே இப்படி ஒரு படம் பார்த்ததேயில்லை!''

எஸ். பொன்னுசாமி,
உடுமலைப்பேட்டை.

## மணவாழ்க்கை

மணவாழ்க்கை என்பது முற்றுகையிடப்பட்ட ஒரு கோட்டை போன்றது;
வெளியே இருப்பவர்கள் உள்ளே செல்ல விரும்புவார்கள்...
உள்ளே இருப்பவர்கள் வெளியே வர விரும்புவார்கள்!
- அரேபியப் பழமொழி

கே. அவினாசியப்பன்
சூலூர்.

●●●

"நம்ம ராமுவைப் போல ஒரு கஞ்சனை நீ பார்க்கவே முடியாது..."

"அப்படியா?"

"ஆமாம், சோடா குடிக்கணும்னு ஆசை வந்தா உடனே, ரோடிலே, மயக்கம் போட்டு விழுந்திடுவான்னா பார்த்துக்கோ!"

- கஞ்சம்பட்டி,
ஆர். கோபாலகிருஷ்ணன்.

கோவை பழைய புத்தகக் கடையில் கேட்டது...

ஒருவர் : ஏனுங்க! ஏதோ ஒரு புக் சுஜாதா எழுதியது - சிலுக்கின் ஜில்லுப் புரட்சி - அப்படீன்னு... அது உங்ககிட்ட இருக்குதா?

கடைக்காரர் : ஏனுங்க இப்படி அலையறீங்க! அது சிவிக்கன் சில்லுப் புரட்சி - பெரிய விவகாரம். கம்ப்யூட்டர் சமாசாரம்!

ஜெயந்த் பாலாஜி, செட்டிபாளையம்.

● ஒப்பணக்காரத் தெரு - கடைவீதிப் பகுதியில் உள்ளது. பெயர்க் காரணம் என்ன? சிலரின் கருத்து இது : ''ஓ... பணக்காரத் தெரு'' என்பது மாறி இப்படி வந்து விட்டது!

இரண்டாவது கருத்து : ஒப்பிட்டுப் பார்க்க முடியாத அளவுக்கு இது பணக்காரத் தெரு - ஆகவே ஒப்பணக்காரத் தெரு!

● கடைவீதிப் பகுதியிலேயே வித்தியாசமான பெயரில் ''கெட்டிக்காரன் அண்ட் கோ'' என்று ஒரு மூக்குக் கண்ணாடி கடை உள்ளது! மற்றொன்று ''ஆட்டோக்காரன் ஒயின்ஸ்''!

● டவுன் பஸ்கள் மிக விரைவாக ஓட்டப் படுகின்றன! நம்பர் 7 காந்தி பார்க் பஸ் - கோவையில் சில முக்கிய இடங்களைச் சுற்றிக் கொண்டு ஓடுவதால் இதைச் செல்லமாக 'ஊர் சுற்றி பஸ்' என்று அழைக்கின்றனர்!

● அதே போல் டவுன் பஸ் ஸ்டாப்பிங்களில் சில வேடிக்கையான பெயர்களும் உண்டு. 'சுடுகாடு எல்லாம் இறங்குங்க', 'புளியமரம் எல்லாம் இறங்குங்க' 'தடாகத்திலே குதியுங்க' என்றால் வேடிக்கையாக உள்ளது அல்லவா? ஆம். சுடுகாடு, புளியமரம், தடாகம் என்பது பஸ் ஸ்டாப்பிங்கின் பெயர்கள்.

வஸந்தா ராஜகோபால்,
கோவை - 38.

கலகலகலகலகலகலகலகலகலகலகலகலகலகலகலகலகல

# வட்ட மேஜை

# 'அன்பைத் தேடி' அழ வைத்து விட்டதே!



♦ **ஏப்ரல் ஃபூல் கார்டூன் சிம்பின்...** ஆனாலும் சூப்பர்
திருச்சி - 14. ராஜிராதா

♦ **தலைவலிக்கு ராமதாஸோ, திருகு** வலிக்கு திவாரியோ அவர்களின் விவகாரங்களைப் படிக்கப் படிக்க மக்களுக்கு தலைவலி, திருகு வலியோடு 'நெஞ்சு வலி'யும் சேர்ந்து வருகிறது என்று கூட ஒரு வலியை... மன்னிக்கவும் ஒரு வரியைத் தலையங்கத்தில் சேர்த்திருக்கலாம்!
சென்னை-91, ஐயாறு வாசுதேவன்

♦ **எம்.ஆர்.எஃப் நிறுவனத் தோற்றம்** முதல் அதன் வளர்ச்சியின் படி நிலைகள் மற்றும் இன்றுள்ள அதன் நிலை, எதிர்காலத் திட்டங்கள் எனப் பல தகவல்களை அலசி வெளியிடப்பட்டிருந்த கட்டுரை பல புதிய செய்திகளைத் தெரிவித்தது. எம்.ஆர்.எஃப் நிறுவனரின் விடா முயற்சியும் உழைப்பும் வியக்க வைத்தன.
செம்பட்டி, சோ. ராமு.

♦ **ஒரே படத்தில் நிமிர்ந்து பார்க்க** வைத்த ராஜீவ் மேனன், "வெளிநாடு சென்று சிறந்த ஒளிப்பதிவாளரிடம் அஸிஸ்டெண்டாகப் பணியாற்றி வரலாமென்றிருக்கிறேன்" என்று கூறி அண்ணாந்து பார்க்க வைத்து விட்டாரே!
நெல்லிக்குப்பம், வி.மோகன்

♦ **கல்கியின் அட்டை அழகு சார் அப்**படியொரு அழகு!
ஏத்தாப்பூர், காம்ப்ளி ப்ரியன்.

♦ **'அன்பைத் தேடி' என்ற சிறுகதையைப்** படிக்க ஆரம்பித்ததிலிருந்து முடிக்கும் வரையிலும் என் கண்களில் நீர் வற்றவே இல்லை. மற்றவர்களுடைய நிலை எப்படியோ: ஆனால் என்னைப் போல் இரண்டு வயதிற்குள் தாயை இழந்தவர்களுடைய கண்களில் கண்டிப்பாக ஆறு ஓடி இருக்கும். கதாசிரியருக்கு என்னுடைய நெஞ்சம் நிறைந்த வாழ்த்துக்கள்.
சிவகாசி, ஏ.கே. முத்தையாபிள்ளை

♦ **"என்ன சாமான் வரும் என்று மற்ற**வர் நினைக்கும் போது, சீனி மட்டும் வந்தால் போதும் என நீ நினைப்பாய் என்ற என் திமிர், தற்பெருமை..."- தாயைப் பற்றிய ஒரு மகளின் மெல்லிய உணர்வுகளைத் துல்லியமாய்ச் சொல்லிய 'அன்பைத் தேடி' சிறுகதை, அப்படியே நிற்கும்- என்றும் என் மனத்தில்.
காட்டூர், எஸ்.அருள் மொழி

♦ **கோடைக் காலத்தில், சூரிய**னைப் பற்றி வசை பாடும் மக்களுக்கு, சூரியனின் நன்மைகளைத் தமது கவிதையில் அலசிக் காட்டிய சூரியதாஸ் வாழ்க!
விழுப்புரம், வை. சண்முகம்

♦ **'சின்ன மணி' விமர்சனத்தில் அதைப்** 'பெரிய மணிதான்' என்று ஒப்புக் கொண்ட உங்க பெரிய மனசைப் பாராட்டலாம் என்று நினைத்தால், அந்த இயக்குனர் பெயரை வெளியிடாமல் மழுப்பிய உங்களைச் சட்ட சபையில் எதிர்க்கட்சி வரிசையில் உட்கார வைக்க வேண்டும்யா!
பவித்திரமாணிக்கம், தராசுப்ரியன்

♦ **சின்னத்திரை, குட்டித்திரை என்று** டீ.வி.க்கும், கம்ப்யூட்டருக்கும் பெயர் கொடுத்த மிஸ்டர் எறும்புக்கு ஒரு தகவல்: எங்கள் வீட்டருகே ஸ்வேதா என்ற ஒரு குழந்தை நேற்று வந்தது. "தாத்தா தாத்தா நான் பெரிய டீ.வி. பார்த்தேனே!" என்றது. முதலில் எனக்கு ஒன்றும் புரியவில்லை. பிறகு தனியாக விசாரித்த போது சினிமாவுக்குப் போய் வந்ததை அப்படிக் கூறுவது தெரிய வந்தது! குழந்தையின் பார்வையில் சினிமா பெரிய டீ.வி.யாக ஆகியுள்ளது. ஆச்சரியமாக இருக்கிறது!
சென்னை-92. ஜி.கே. மூர்த்தி

வட்ட மேஜையில் இடம் பெறும் சிறப்பான, சிரிப்பான விமர்சனக் கடிதங்களுக்கு, இனி பரிசுகள் வழங்கப்படும்.
-ஆசிரியர்

மழை நின்ற பின்பும்....

மழை நின்ற பின்பும்.... மழை நின்ற பின்பும்....

மழை நின்ற பின்பும்.... மழை நின்ற...



# மழை நின்ற பின்பும்

சித்ரன்

"கண்ணம்மா..."

வீல் வீலென்று அழுகிற குழந்தையைப் பார்த்துச் செல்லமாகக் கூப்பிட்டான் ஜகதீஷ். அது அழுவதை சந்தோஷமாய்ப் பார்த்தான். தொட்டுப் பார்த்தான்.

சின்ன குண்டு கண்கள். அழகாய் குவிந்த வாய், இத்துனூண்டு விரல்கள், வெல்வெட் சுருள்முடி, மெத கன்னம் - பெண் குழந்தை.

ஜகதீஷுக்குத் தவிர்க்கவே முடியாமல் பாரதியின் நினைவு மின்னலாய் வந்து நின்றது. 'பாரதி! நீ எனக்கு மனைவியாய் வாய்த்திருந்தால் - இது போல் எனக்குப் பெண் குழந்தை பெற்றுக் கொடுத்திருப்பாயா?'

'வேண்டாம்!' தப்பான நினைப்பென்று கலைக்க முயன்றான். முடியவில்லை. மனைவி சாந்தாவைப் பார்த்தான். அவள் அழுகிற குழந்தையை 'ஜோ... ஜோ'வென்று தாலாட்டிக் கொண்டிருந்தாள். அவளைப் பார்த்துச் சொன்னான்.

"எனக்குப் பிடிச்ச மாதிரி பெண் குழந்தையே பெத்துக் குடுத்திருக்கடி..."

சாந்தா கண் சிமிட்டிச் சிரித்துச் சொன்னாள்.

"உங்களுக்கு என்ன பிடிக்கும்னு எனக்குத் தெரியுங்க..."

ஜகதீஷ் புன்னகைத்தான். 'பாரதிக்கும் தெரியுமே' என்று மனத்தில் சொல்லிக் கொண்டான். அவள் முகம் அவனுள் விலகாமல் கடிகார பெண்டுலம் போல் அசைந்தாடிக் கொண்டிருந்தது.

அவனுக்குத் தன் மேல் சலிப்பாக வந்தது. 'ஏன் நான் அவளைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்கிறேன்? அவளுக்குக் கல்யாணமாகி, ஒரு குழந்தை கூட இருக்கிறதே. ஐந்து வருடங்கள் கழிந்து ஏன் அவளின் நினைவுகள் என்னைத் துரத்திக் கொண்டிருக்கின்றன? இல்லை, நான்தான் அந்த நினைவுகளைத் துரத்திக் கொண்டிருக்கிறேன்...' - யோசனைகள் ஓடின.

**ஒ**ரு வாரமாகத்தான் இப்படி - அவனுக்குக் குழந்தை பிறந்ததிலிருந்து... அதன் முகத்தைப் பார்த்தால் பாரதி ஞாபகம். இரவுத் தூக்கம் நடுநிசிகளில் கலைகிறது. புரண்டு படுக்கிறான். சில்வண்டு இரைச்சல் போல நினைவுகள் மட்டும் மனதோரத்திலிருந்து கிளம்பிக் கொண்டிருக்கின்றன. பக்கத்தில் தூங்குகிற சாந்தாவைப் பார்த்தால் அவனுக்கு உறுத்தலாயிருக்கிறது.

'எங்கேயிருக்கிறாய் பாரதி? பிரிந்து ஐந்து வருடங்களாகி விட்டது. எப்படியிருக்கிறாய்? இடைக்கிற இடைவெளிகளில் எப்போதாவது என்னை நினைத்தாயா? ஒரு தடவையாவது? நம் பிரிவின் பாரத்தை எப்படித் தாங்கிக் கொண்டாய்? சந்தோஷமாயிருக்கிறாயா!...

எனக்கும் கல்யாணமாகி ஒரு பெண் குழந்தை - எனக்குப் பிடித்த மாதிரி - பிறந்தது... தெரியுமா உனக்கு? கேள்விப்பட்டாயா?'

ஜகதீஷ் மனசுக்குள் அவளோடு பேசினான்.

சாந்தாவிடம் சொல்லலாமா என்று யோசித்தான். 'இங்க பார் சாந்தா... ஒரு வாரமா எனக்கு...' வேண்டாம். சாந்தாவிடம் பாரதியைப் பற்றியும், கடந்த காலம் பற்றியும் எல்லாம் சொல்லியிருக்கிறான்தான். ஆனால்... இப்போது எதற்கு மறுபடி அவளைப் பற்றின பேச்செடுக்க வேண்டும். அப்புறம் தெளிந்த பக்கெட் நீரில் மண்கட்டி போட்ட மாதிரி கூட ஆகலாம். ஆகவே வேண்டாம்.

ஆபீஸ் போய் உட்கார்ந்தாலும் யோசனைகளில் மறுபடி பாரதியே உலவினாள்.

ஜகதீஷுக்கு மெல்ல வேறொரு எண்ணமும் முளைத்தது.

'உன்னைப் பார்க்கணுமே பாரதி!'

**க**டந்த பழைய நாட்கள்.

பொட்டானிக்கல் கார்டன், அதிகக் கூட்டமில்லாத பஸ் ஸ்டாப், இண்டியன் காபி ஹவுஸ், மெதுவாய் வாக்கிங் போன ரேஸ் கோர்ஸ் ரோடு. ஒரு சினிமா தியேட்டர். இன்னும் பல இடங்கள்.

ஜகதீஷும், பாரதியும் - லேசாய்க் கோத்துக் கொண்ட கைகள்.

"பாரதி!" ரகசியமாய்க் கூப்பிடுவான் ஜகதீஷ்.

"ம்..."

"நான் மழை நின்னதுக்கப்புறம் ஏதாவது சின்ன மரத்தடில நின்னு அதை ஆட்டிப் பார்ப்பேன். அந்த மரத்திலிருந்து மழைத் தண்ணி தெறிக்கறப்ப மறுபடி மழை பெய்யற மாதிரி இருக்கும். இந்த ஃபீலிங் எனக்கு ரொம்பப் புடிக்கும் தெரியுமா?" ஜகதீஷ் சொல்வான்.

"எனக்கு வானவில்னா ரொம்பப் பிடிக்கும்" என்பாள் அவள். பாரதி. இவன் சிரிப்பான்.

இதுபோல் இன்னும் பரிமாறின ரசனை கள் நிறைய. இந்தத் தொடர்பு ஒரு கட்டத் தில் வானவில்லாக மறைந்து விடப் போகி றது என்று உணரவேயில்லை இருவரும். நேசிப்பு தொடர்ந்தது. காலம் பற்றி யோசிப்பு இல்லை.

"நம்ம ரெண்டு பேத்துக்கும் கல்யாண மாகி ஒரு பொண்ணு பெத்துக்கனும்..." அவன் அவள் கன்னம் சிவப்பதைக் கவ னித்துக் கொண்டே சொல்வான்.

"அவளை எப்படி வளர்க்கனும் தெரி யுமா? ரொம்ப புத்திசாலியா... அப்புறம் ரொம்ப தைரியசாலியா, அப்புறம் நிறைய திறமைகள் உள்ளவளா... அருமையான ரச னைகள் உள்ளவளா... அப்புறம் அவ பெரி யவளாகும் போது ஏதாவது ஒரு துறையில ரொம்ப மதிப்புள்ள, பாப்புலரான ஆளா..." ஜகதீஷ் யோசித்து யோசித்து ஒவ்வொன் றாய்ச் சொல்லிக் கொண்டே போக...

பாரதி ஆச்சரியமாய்க் கேட்டுக் கொண்டே யிருப்பாள்.

"எல்லாம் நடக்கும் ஜகதீஷ்..." - நம்பிக் கையான ஒரு வார்த்தை. அவன் கைகளை இறுக்கிக் கொள்வாள்.

நடந்தது வேறாகி விட்டது. எல்லாம் தடம் புரண்டன. வெறுமையான ஒரு சூழலில் சில பிரச்னைகள் எழுந்தன. ஜகதீஷ் ஒரு நல்ல வேலை கிடைக்காமல் அலைந்தான். இடைப் பட்ட காலத்தில் வீட்டின் நெருக்கடிகள் கார ணமாக அவளுக்கு முறைப் பையனுட னேயே கல்யாணமாகி...

காலம் இழுத்துக் கொண்டு போன போக் கில் இவன் ஒரு ஊர். அவள் ஒரு ஊர். "மன்னி யுங்கள் ஜகதீஷ்" என்று ஒற்றை வார்த்தையில் பாரதி கடிதம் எழுதினாள்.

**சா**ந்தா மாதிரி மனைவி எல் லோருக்கும் கிடைத்துவிடுமா என்ன? கல்யாணமான புதிதில் மெல்ல அவளைப் பற்றிச் சொன் னான். எல்லாம். சாந்தா புன்ன கைத்துக் கொண்டே முழுக் கதை யும் கேட்டாள். மனத்தைப் புரிந்து கொண்ட மனைவி அவள்.

இன்று -

பாரதியைப் பார்க்கப் போவ தைப் பற்றி ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை அவளிடம். சொல் லாமலே கிளம்பியிருந்தான்.

"ஒரு ஃப்ரெண்டைப் பார்த் துட்டு வரேன்."

பாரதியைப் பார்த்தேயாக வேண்டுமென்று ஒரு தீவிரம் எழுந்து, முடி வாய் மாறியிருந்தது. பாலு முயற்சி செய்து அட்ரஸ் பெற்றுத் தந்திருந்தான். கோயமுத் தூரில்தான் இருக்கிறாளாம்.

நியூ சித்தாப்புதூரில் வீடு.

அவள் குழந்தைக்கு பிஸ்கட் பாக்கெட் ஒன்றை வாங்கிக் கொண்டு புறப்பட்டான்.

**ஆ**ச்சரியமா, அதிர்ச்சியா என்று தெரி யாத முகபாவத்தில் அவள் நின்றிருந்தாள். கண்கள் விரிந்தன.

"ஜகதீஷ்...!" குரலில் நம்பிக்கையின்மை.

அவன் தன் சங்கடத்தை உதறிக் கொண்டு சிரித்தான்.

"நலமா?"

உள்ளே அழைக்கப்பட்டான். பரஸ்பரம் பதற்றத்தை மறைத்துக் கொண்டு இயல்பான குசலம் விசாரிப்புகள். ஜகதீஷ் மேசை மேல் போட்டோ பார்த்தான். அவள், அவள் கண வன் மற்றும் பையனுடன் புன்னகைத்துக் கொண்டிருந்தாள்.

"இந்தா உன் பையனுக்கு..." பிஸ்கட் பாக் கெட் கொடுத்தான். "உன் ஹஸ்பெண்ட்?"

"அவர் இன்னும் வேலையிலிருந்து வரலை. வினு ஸ்கூலிலிருந்து வரலை. நாங்க மூணு பேர்தான் இந்த வீட்ல..."

அவளின் அந்தப் பழைய மழலைச் சிரிப்பு மட்டும் மாறவில்லை என்று நினைத் துக் கொண்டான்.

சாந்தாவைப் பற்றிச் சொன்னான். தன் பெண் குழந்தையைப் பற்றியும்.

"ஹை..." என்று அவள் முகம் மலர்ந்தது.

"உங்களுக்குப் பிடிச்ச மாதிரியேவா?"

"உனக்கும்..."

சில நிமிடங்கள் மௌனமாகவும் கழிந் தன. பின்னர் ஏதேதோ பேசிக் கொண்டிருந் தார்கள். நேரம் நகர்ந்தது.

"தலைவா! நம்ப வீட்டு வாசல்ல ஜனங்க கூட்டமா வந்திருக்காங்க."

"எந்த விழாவுக்குத் தலைமை வகிக்கனுமாம்?"

"அதுக்கில்லே, 'நாங்க வோட்டு போட்டுத்தானே ஜெயிச்சு எம்.எல்.ஏ. ஆனாரு; லஞ்சமா சம்பாதிக்கறதிலே எங்களுக்கும் பங்கு கொடுக்க ணும்'னு கேட்க வந்திருக் காங்க!"

- வி.பி. கிருஷ்ணசாமி



ஜகதீஷ், தொண்டையில் வார்த்தைகளைச் சிக்கலெடுத்து விட்டுக் கேட்டான். கேட்கும் போது பயமாகக் கூட இருந்தது அவனுக்கு.

"ஒண்ணு கேட்டா தப்பா நினைக்க மாட்டியே?"

கேள்விக்குத் தயாரானாள் அவள்.

"நம்ம பிரிவை எப்படித் தாங்கிக்கிட்டே நீ? எப்படி என்னை மறக்க முடிஞ்சது? எப்பவாவது என் ஞாபகம் வருமா?"

"ஏன் கேட்டோம் என்று கூட இருந்தது ஜகதீஷுக்கு. இத்தனை காலம் கழித்து இங்கே ஏன் இப்போது திடீரென்று வந்தோம் என்று கேள்வி எழுந்தது அவன் மனத்தில். எழுந்து போகலாமா என்று யோசித்தான்.

பாரதி பதில் சொல்லாமல் உள்ளே போனாள்.

அவஸ்தை நொடிகள் கடந்தன. காப்பியுடன் வந்தாள். நீட்டினாள். மெதுவாய் சன்னக் குரலில் பேச ஆரம்பித்தாள்.

"என் பையன் வினு இருக்கானே... அவன் ரொம்ப சுட்டி! மூணரை வயசு. ரொம்ப புத்திசாலி. இந்த வயசுல அவன் அறிவைப் பார்த்து டைரக்டா அவனை யு.கே.ஜி.க்கு அனுப்பிட்டாங்க. அங்கேயும் ஃபர்ஸ்ட். ஹிந்தி கத்துக் கொடுக்கறேன் அவனுக்கு. இன்னும் ரெண்டு பாஷை கூட கத்துக் கொடுக்கணும். இப்ப இருந்தே அவன் தைரியத்தை வளர்த்துட்டிருக்கேன். அட்டகாசமாக அவன் ட்ராயிங் போடறதை என்கரேஜ் பண்றேன். அவனை ரொம்ப திறமைசாலியா ஆக்கணும். பாப்புலர் பப்ளிக் ஃபிகரா கொண்டு வரணும்ங்கறதுதான் என்னோட நோக்கம்."

நிறுத்திவிட்டு ஜகதீஷைப் பார்த்து அர்த்தத்துடன் புன்னகை செய்தாள்.

"இது பத்தாதுன்னு டவுன் பஸ்ல போகும் போது, ஒரு பெல் அடிச்சா பஸ் நிக்கும். ரெண்டு பெல் அடிச்சா பஸ் கிளம்பும்ங்கிற மாதிரி சின்னச் சின்ன விஷயங்களையும் கூட அவனுக்குச் சொல்லிக் கொடுக்கறேன் ஜகதீஷ்.. அப்புறம்... மழை நின்னதுக்கப்புறம் அவனும் நானும் என்ன பண்ணுவோம் தெரியுமா? தோட்டத்துல ஒரு மரத்தடியில போய் நின்னு அதை ஆட்டி..."

அவளுக்கு லேசாய்க் கண்கள் கலங்குவதைப் பார்த்தான் ஜகதீஷ்.

"மழை நின்று மரம் பெய்கிறது மழை..." சிரித்தாள்.

"எல்லாம் உங்களோட எண்ணங்கள் தான் ஜகதீஷ். உங்களோட ரசனைகள். உங்களோட பாதிப்பு... ஸோ.. எப்படி நான் உங்களைப் பிரிஞ்சதாய் இருக்க முடியும்? மறந்ததாய் இருக்க முடியும்?"

ஜகதீஷ் அவளை அமைதியாய்ப் பார்த்துக் கொண்டிருந்தான். "தேங்க்யூ பாரதி" என்றான்.

விடைபெற்றுக் கொண்டான்.

இப்போது மனசு நிலைக்கு வந்திருந்தது.

ஆனால் திரும்பி வந்தும் கூட சாந்தாவிடம் இதைப் பற்றிச் சொல்லவும் பேசவும் ஏதோ தயக்கம் தடுத்தது.

குழந்தை ஒன்றுக்குப் போன இடத்தில் சாந்தா துணியால் துடைத்துவிட்டுக் கொண்டிருந்தாள்.

"கண்ணம்மா..." என்று கூப்பிட்டான் ஜகதீஷ். "என்னடா, அம்மா சேலையையும் சேத்தே நனைச்சிட்டியா...?" என்றான் குழந்தையிடம்.

"எத்தனை நாள்தான் கண்ணம்மா, கண்ணம்மான்னு கூப்பிட்டிட்டிருப்போம்? ஸ்கூல்ல சேர்க்க ஒரு பேரு வெக்கணுமில்லை...?" என்றாள் சாந்தா. குழந்தைக்கு கவுன் மாற்றிக் கொண்டிருந்தாள்.

'பாரதின்னு வெக்கலாமா?' - கேட்க எழுந்த ஆவலை மிகக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான் ஜகதீஷ்.

"நீயே ஒரு நல்ல பேராச் சொல்லு..." என்றான்.

"ங்..ஙா...!" என்றது குழந்தை.

"நல்ல பேர் ஒண்ணு செலக்ட் பண்ணி வெச்சிருக்கேன். சொல்லட்டா?" என்றாள் சாந்தா.

"என்ன பேர் அது?" ஜகதீஷ் குழந்தையின் விரல்களை ஒவ்வொன்றாய்ப் பிரித்து ஆராய்ந்தவாறே கேட்டான்.

"பாரதி... பா.. ர.. தி!"

ஜகதீஷ் சட்டென்று நிமிர்ந்து சாந்தாவை ஊடுருவிப் பார்த்தான். உடம்பெங்கும் ஜில்லென்று ஓர் உணர்ச்சி பரவியது அவனுக்கு. புருவங்கள் உயர்த்தி நம்பாமல் பார்த்தான்.

சாந்தா கண்சிமிட்டிச் சிரித்தாள்.

உங்களுக்கு என்ன பிடிக்கும்னு எனக்குத் தெரியுங்க என்று சொல்வது மாதிரி இருந்தது அந்தச் சிரிப்பு.

---



**"சிஷ்யா, ஏன் அழுதுக்கிட்டு இருக்கே?"**

**"நீங்க தினம் ஓம்... ஓம்னு சொல்லிக்கிட்டே இருக்கணும்னீங்களா, எனக்கு HOME ஞாபகம் வந்திடிச்சி... அதான்...!"**

**- ராஜன்**



ராஜாராமனின் ...) களை இழந்து ...ணப்பட்டது. அவர் ...க்கமாக உட்காரும் ...'மா தேக்கு நாற்காலி ...ாலியாக இருந்தது. ...மசை மீது அவர் வைத்திருந்த புத்தகங்கள் அப்படியே இருந்தன. அவற்றின் மீது தூசு படிந்திருந்தது. எதிரே சோபாவில் உட்கார்ந்திருந்த அஞ்சனா எழுந்து போய் ஒரு துணியால் மேசையையும் புத்தகங்களையும் தூசு போகத் துடைக்கத் தொடங்கினாள். சுவரில் தொங்கிக் கொண்டிருந்த அருணின் பெரிதுபடுத்தப்பட்ட புகைப்படத்தில் கூடத் தூசி படிந்திருந்தது. ஒரு முக்காலியில் ஏறி நின்று கொண்டு அதையும் துடைத்துப் பளிச்சென்று ஆக்கினாள். அண்ணன் அருணின் பெரிய விழிகள் ஓர் ஊடுருவலுடன் தன்னைக் கூர்ந்து பார்ப்பவை போல் அவளுக்குத் தெரிந்தன.

ஜோதிர்லதா கிரிஜா

''என்ன அஞ்சனா பண்ணிண்டிருக்கே?'' என்றாள் அமராவதி.

''அப்பா போனதுலேர்ந்து எல்லாம் வச்சது வச்சபடியே இருக்கிறதுனால எல்லாத்து மேலேயும் ஒரே தூசி. அதான் துடைச்சிண்டிருக்கேன். ரொம்ப வயசானவராச்சேன்னு கூடப் பார்க்காம ஜெயில்ல அப்பாவை என்ன பாடு படுத்தறாளோ!''

அஞ்சனா கண்கலங்கிய வண்ணம் முக்காலி யிலிருந்து கீழே இறங்கினாள்.

"அப்பாவைப் பிடிச்சண்டு போனதைப் பார்த்த நம்ம தெருக்காரா சொல்லி இருக்கல்லேன்னா அது கூட நமக்குச் சரியாத் தெரிய வந்திருக்காது. ஒரு ஊகந்தான் பண்ணி இருப்போம்."

"எந்த ஜெயில்ல வெச்சிருக்காளோ, எத்தனை நாள் வெச்சிருப்பாளோ."

"கல்கத்தா ஜெயில்லேருந்து வந்து கொஞ்ச நாள் கூட ஆகல்லே, அதுக்குள்ள நரேனுக்கு மறுபடியும் ஜெயில் வாசம். மாமனாரும் மாப்பிள்ளையும் ஒரே ஜெயில்ல இருந்தா நமக்கு நிம்மதி."

"ஆனா அதை எப்படிக் கண்டுபிடிக்கிறது?"

"யாராவது போலீஸ் ஆபீசரைப் பிடிச்சா முயற்சி பண்ணிப் பார்க்கலாம். பாவம், அப்பா. வயசான காலத்துல ஆத்துல விழுந்து கிடக்காம இது என்னத்துக்கு வீண் அக்கப்போர்?"

"நாம கூடத்தான் ஊர்வலத்துல கலந்துண்டோம். ஆனா நம்மையெல்லாம் போலீஸ் வாரியில ஏத்திண்டு போய் ஊருக்கு வெளியில விட்டுட்டா. அடியம்மா. அங்கேருந்து வந்து சேர்றதுக்குள்ளே உயிரே போயிடுத்து. இப்ப நெனச்சாக் கூட ஏதோ பயங்கரக் கனா மாதிரி இருக்கு," என்று அஞ்சனா முகம் வெளிறித் தோள்களைக் குலுக்கிக் கொண்டாள்.

அப்போது வாசலில் ஒரு காரின் ஹாரன் ஓசை கேட்டது. அமராவதி சன்னல் பக்கம் போய் நின்று பார்த்தாள். வந்திருந்தது ஒரு போலீஸ் வேன். அதிலிருந்து மூன்று போலீஸ்காரர்கள் முதலில் குதித்தார்கள். அடுத்து நரேந்திரநாத் பானர்ஜி மெல்ல இறங்கினான்.

"வெள்ளையனே வெளியேறு" என்று கோஷமிட்டவாறு சென்ற ஊர்வலத்தில் மணவாளநாயுடுவும் கலந்து கொண்டு போலீஸாரின் குண்டாந்தடி பிரயோகத்துக்கு இலக்காகி, காயங்களுடன் படுத்திருந்தார். அவரைக் காணச் சென்றார் ராமசாமி. "வாரும், அய்யர்வாள். உக்காரும்," என்று படுக்கையில் இருந்தபடியே மணவாளநாயுடு ராமசாமியை வரவேற்றார்.

அவர் உடல்நலனை விசாரித்த ராமசாமி, தொடர்ந்து அரசியல்ரீதியாகச் சில நிமிஷங்கள் பேசி முடிப்பதற்கு முன், அவசரமாக வாசற்கதவு தட்டப்பட்டது. போய்ப் பார்த்த திருமதி மணவாளநாயுடு, "அவரோட மகன் வந்திருக்காங்க. வாப்பா, தம்பி. உள்ளாற வா," என்றாள்.

"அப்பா, ராஜாராம் மாமா செத்துப் போயிட்டார்! ஜெயில்லேருந்து பாடியை நரேந்திரநாத்தோட அனுப்பி வெச்சிருக்கா. செல்லம்மா மாமியாத்துக்கு ஃபோன் வந்தது. வறேனாப்பா?"

படுக்கையில் தளர்வாகப் படுத்திருந்த மணவாளநாயுடு கணத்துக்கும் குறைவான நேரத்துள் நிமிர்ந்தார். அவர் விழிகள் ஒரு நம்ப முடியாமையுடன் குத்திட்டு நின்றன. ராமசாமி உடனே எழுந்து கொண்டார்.

"என்னடா இது அநியாயமா இருக்கு? ஜெயில்ல அடிச்சுக் கிடிச்சுப் பண்ணி இருப்பானோ?"

"அந்த விவரமெல்லாம் தெரியல்லேப்பா. போய்ப் பார்த்தாத்தான் தெரியும். நரேனைப் 'பரோல்'ல அனுப்பி இருக்காளாம். 'காரியம்' முடிஞ்சதும் திரும்பிடணும்னு சொல்லி, கூடவே ரெண்டு போலீஸ்காரங்களையும் அனுப்பி வெச்சிருக்காங்க."

"இருங்க, அய்யர்வாள். நானும் வர்றேன்."

"நகரவே கஷ்டப்படறீங்க? நீங்க எப்படி வருவீங்க, நாயுடுகாரு?"

"ஒரு வண்டி பிடிச்சுண்டு மூணு பேருமாப் போயிடலாம் அய்யர்வாள். அவரோட பாடியையாவது நான் பார்க்க வேணாமா?"

'பாடி... வெறும் உடல்... பிணம்... உயிரற்றது...' - நினைத்துப் பார்த்த ராமசாமிக்குத் திக்கென்றது. 'நரேனாவது உடனிருந்தானே?' எனும் அற்ப ஆறுதலும் ஏற்பட்டது.

ராஷ்பிகாரி போசின் அழைப்பை ஏற்று, 1943, பிப்ரவரி 8-ஆம் நாள் ஜெர்மனியைவிட்டு யூ போட்டில் - சிறு கப்பலில் - புறப்பட்ட சுபாஷ் சந்திரபோஸ், எதிர்ப்படக்கூடிய பிரிட்டனின் கப்பல்களைத் தவிர்க்கும் பொருட்டு அட்லாண்டிக் பெருங்கடலில் சுற்று வழியில் பயணம் செய்து, ஏற்கெனவே பேசிக்கொண்டபடி மடகாஸ்கரிலிருந்து நூறு மைல்களுக்கு அப்பால் குறிப்பிடப்பட்டிருந்த ஓரிடத்தில் தயாராகக் காத்திருந்த ஜப்பானிய நீர்மூழ்கிக் கப்பலையடைந்தார். கப்பல் மாறி புறப்பட்டு டோக்கியோவை ஜூன் 13-ஆம் நாளன்று அடைந்தார். ஜப்பான் பிரதமர் டோஜோவைச் சந்தித்தபின், மிகவும் உடல்நலக் குறைவிலும் அவரைக் காண அங்கு வந்திருந்த ராஷ்பிகாரி போஸ் அவரைச் சிங்கப்பூருக்கு அழைத்துப் போனார்.

சிங்கப்பூருக்குப் புறப்படுவதற்கு முன்னால், சுபாஷ்சந்திரபோஸ் டோக்கியோ ரேடியோவில் உரையாற்றினார். இந்தியாவின் கிழக்கு எல்லைகளிலிருந்து பிரிட்டனுடன் போரிடத் தாம் தீர்மானித்துள்ளது பற்றி அவர் அறைகூவினார்.

சுபாஷ் சந்திரபோசுக்குச் சிங்கப்பூரில் ராஷ்பிகாரி போஸ் ஏற்கெனவே செய்து வைத்திருந்த முன்னேற்பாட்டின்படி மகத்






தான வரவேற்பு அளிக்கப்பட்டது. ராஷ்பிகாரி போஸ் தமது இடத்தில் இனி சுபாஷ் சந்திரபோஸ் செயல்படுவார் என்று மக்களுக்கு அறிவித்தார். அங்கு கூடி இருந்த ஆயிரக்கணக்கான இந்தியர்கள் ஆரவாரம் செய்தார்கள். இனி இந்திய தேசிய ராணுவத்துக்கு அவரே தலைவர் என்றும் ராஷ்பிகாரி போஸ் அறிவித்தார். பின்னர் சுபாஷ்சந்திர போஸ் 'நேதாஜி' - பெருந்தலைவர் என்று அழைக்கப்படலானார்.

அக்டோபர் 21 ஆம் நாள், மாபெரும் கூட்டத்துக்கு முன்னால், சிங்கப்பூரில் இந்தியாவின் தற்காலிக அரசு அமைக்கப்பட்டு விட்டதாக நேதாஜி அறிவித்தார்.

இந்தியாவிலோ, அக்டோபரில் லின்லித்கோ ஓய்வு பெற, அவரிடத்தில் வேவல் வைசிராயாகப் பதவி ஏற்றார். அவரது பதவியேற்புப் பேச்சிலும் எந்த மாறுபாடும் காணப்படவில்லை. பழைய வைசிராய்களின் பேச்சுக்களுக்கு மறுபதிப்புகளாகவே அது இருந்தது.

அதே ஆண்டு, டிசம்பரில், கராச்சியில் நடந்த முஸ்லிம் லீக் மாநாட்டில், வெள்ளையரை நோக்கி, 'பிரித்து விட்டுப் பிரிந்து விடுங்கள்' எனும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

அங்கே, சிங்கப்பூரில், நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் 'தில்லி சலோ' - தில்லியை நோக்கிச் செல்லுங்கள் - எனும் போர் முழக்க அறைகூவலையும், 'ஜெய் ஹிந்த்' எனும் தேசிய ஆர்வச் சொல்லையும் தம் படை வீரர்களுக்கு அறிமுகப்படுத்தினார்.

1943-ல் காந்தியடிகளிடம் பாகிஸ்தான் பிரிவினை பற்றித் தாம் தயாரித்திருந்த திட்டத்தை ராஜாஜி சமர்ப்பித்தார். ஜின்னாவின் பிடிவாதம் இனி இம்மியும் குறையப் போவதில்லை என்பது திட்டவட்டமாய்த் தெரிந்து போன பிறகு, 'ராஜாஜியே இந்தத் திட்டத்தைக் கைவிட்டாலும் நான் கைவிடுவதாக இல்லை' என்று காந்திஜி அறிவித்தார்.

இதற்கிடையே கஸ்தூர்பா காலமானார். ஏப்ரல், 1944 இல் ராஜாஜி தமது பிரிவினைத் திட்டம் பற்றி ஜனாப் ஜின்னாவுடன் விவாதித்தார். ஜின்னா அத் திட்டத்துக்கு ஏற்பளிக்கவில்லை. காந்தியடிகள் ஜின்னாவும் தாமும் அது பற்றிக் கூடிப் பேச வேண்டும் என்று கருதினார். எனவே அப்போது சிறையில் இருந்த காந்தியடிகள் விடுதலையானதன் பின்னர் கூடிப் பேச முடிவு செய்தனர்.

“ஆமா? அந்தப் பிராமணன் உடம்பென்ன அங்கங்க வீங்கி இருந்தது? ஜெயில்ல அடிச்சிருப்பாளோ? நானும் கேக்க வேண்டாம்னு இத்தனை நாளும் இருந்தேன்,” என்று, அரிசியில் கல் பொறுக்கியபடி ராமசாமியிடம் வினவினாள், விசாலம்.

“ஆமா. ஜெயில்ல கைதிகளை மிருகங்களை விடக் கேவலமா வெச்சிருந்திருக்கா. இவர் ஏதோ கண்டிச்சுக் கேட்டிருக்கார். கண், மூக்குப் பார்க்காம, கண்டபடி அடிச்சு நொறுக்கிட்டா. பாவம். உடம்பெல்லாம் கறுப்புக் கறுப்பாக் கன்னிக் கிடந்தது. வயசான காலத்துல இப்படி ஒரு அடி வாங்கி செத்திருக்க வேண்டாம். எல்லாம் தலை எழுத்து. 'பெரியவரை ஏண்டா அடிக்கிறே?'ன்னு கேட்டு அப்ப பக்கத்துல இருந்த சிங்காரவேலுங்கிற கைதி - அவனும் காங்கிரஸ்காரப் பையன்தான் - கேட்டிருக்கான். அவனோட கையை முறிச்சிருக்கா. ஒரே அராஜகம். கேள்வி முறையே இல்லாம போயிடுத்து!”

“அந்த ரெண்டு பொண்ணுகளுக்கும் இனிமே யார் ஆதரவு? அந்த வங்காளி மாப்பிள்ளையும் ஜெயில்ல இருக்கான். உம். எல்லாம் தலை எழுத்து.”

சற்றுப் பொறுத்து, “உயில் கியில் எழுதி வெச்சுட்டுத்தானே போனார் அந்தப் பிராமணன்?” என்று விசாலம் விசாரித்தாள்.

“அதெல்லாம் பக்காவாப் பண்ணி இருக்கார். வக்கீலோல்லியோ?”

“நல்ல காலம். பணக்காரா. இல்லேன்னா சாப்பாட்டுக் கஷ்டம் வேற சேர்ந்துக்கும். அந்த ராமா நாயுடு பொண்டாட்டியாட்டமா பிச்சை எடுத்துப் பொழைக்கும்

படியோ, வீடு விடா போயி எடுபிடி வேலை செஞ்சு பொழைக்கும்படியோ ஆகி இருக்கும்."

"அக்கா. உனக்குத் தெரிஞ்சது நம்ம தெருவில இருந்த ராமா நாயுடு. ஆனா இந்தியா முழுக்க எடுத்துண்டா அவராட்டமா எத்தனை பேர் தெரியுமா? அன்னாடங்காய்ச்சிகள்ளாம் காங்கிரஸ் போராட்டங்கள்ள கலந்துண்டு ஜெயிலுக்குப் போயிருக்கா. செத்துப் போயிருக்கா. கை, கால் முறிஞ்சு எதுக்கும் லாயக்கில்லாம போயிருக்கா. ஏழைகள், பணக்காரா, நடுத்தரமானவா, சின்னவா, பெரியவா, வயசானவா, பொம்மனாட்டிகள்னு கிட்டத்தட்ட இந்த நாடே ஆகஸ்டுப் போராட்டத்துல கலந்திண்டிருந்திருக்கு. இப்ப சூடு தணிஞ்சு அதனால சாதகமான பலன் உடனே ஏற்படத்தக்க அளவில இல்லாம போயிட்டாலும், வெள்ளைக்காரனுக்கு இது சரியான சவுக்கடின்னுதான் சொல்லணும்."

அவளையும் அறியாமல் விசாலத்துக்குக் கண்களில் நீர் கோத்தது.



"நமக்காகப் பாடு படறேன்னு சொல்லி ஜெயிச்சுட்டுப் போனாரே சுயேச்சை எம்.எல்.ஏ. அவருக்கு என்ன ஆச்சு?"

"சட்டசபையில் படாத பாடு படறார்!"

— ஞா. ஞானமுத்து

"என்னவோடாப்பா. குடும்பங் குடும்பமா இப்படித் தியாகங்கள் பண்ணிண்டிருக்கு. பொண்டாட்டிக்குப் புருஷன் இல்லே, பெத்தவாளுக்குப் பிள்ளைகள் இல்லைன்னு ஆயிடுத்து. இது எதுல கொண்டு போய் விடப் போறதோ!"

"எல்லாம் நல்லபடியாத்தான் முடியும், அத்தே. ஆச்சு. முக்காவாசி கடந்தாச்சு. இன்னும் கொஞ்சந்தான் பாக்கி."

ராமசாமி ஒரு நாள் மாலை எழுந்து சட்டையை மாட்டிக் கொண்டு மணவாள நாயுடு வீட்டுக்குப் போனார். வழக்கம் போல் இருவரும் அரசியல் பேசத் தொடங்கினார்கள்.

உலகப் போர் பற்றிய பேச்சுக்களே நாடு முழுவதும் அடிபட்டுக் கொண்டிருந்தன. நேதாஜி சுபாஷ்சந்திரபோஸின் இந்திய தேசிய ராணுவம் தோற்றுவிடப் போவதற்கான அறிகுறிகள் தென்படத் தொடங்கிச் சில வாரங்கள் ஆகி விட்டிருந்தன. இதற்குக் காரணம் பசிபிக் மாகடலில் அமெரிக்காவுடன் ஜப்பான் செய்ய நேர்ந்த மிகக் கடுமையான போரின் விளைவாக, இந்திய தேசிய ராணுவத்துக்குக் கொடுத்திருந்த விமானங்களை ஜப்பான் திரும்பப் பெற்றுக் கொண்டு விட்டதுதான். இதனால் இம்பால் நகரைக் கைப்பற்றும் முயற்சியை இந்திய தேசியப் படையினர் கைவிடும்படி ஆயிற்று. அதற்கு உதவியாக வந்து கொண்டிருந்த தனது படையையும் ஜப்பான் திருப்பியழைத்துக் கொண்டு விட, அதன் நிலை மிக மோசமாயிற்று.

விசாலத்தின் சோர்ந்த முகத்தையும் தளர்ந்த உடலையும் பார்க்கப் பார்க்கக் கங்காவுக்குப் பாவமாகத்தான் இருந்தது. வாய் சற்றே பிளந்திருந்த, அசதியே உருக் கொண்டது மாதிரிப் படுத்திருந்த அவளது கவலையும் களைப்பும் அப்பிய முகத்தைப் பார்த்து அவன் உருகிப் போனான்.

எப்போது படுத்தாலும், மண்டைக்குள் அலாரம் வைத்துக் கொண்டது போல் விசாலம் காப்பி, டிபன் தயாரிக்கச் சரியாக மூன்றரை மணிக்கு எழுந்து கொள்ளுவாள். இன்று அவள் எழுவதற்கு முன்னால் தான் எழுந்து ஒரு சிற்றுண்டி செய்து காப்பியும் போட்டுவிடும் எண்ணம் கங்காவுக்கு வந்தது. 'அத்தை எழுந்து வந்ததும் அப்படியே அசந்து போயிடணும். 'இனிமே நானும் கூட மாட சமையற்கட்டுல உனக்கு ஒத்தாசை பண்ணுவேன். அதனால இனிமே கல்யாணம் பண்ணிக்கச் சொல்லி என்னைத் தொணதொணக்கக் கூடாது' அப்படின்னு சொல்லணும்....'

அவன் வெந்நீர் போட்டு காப்பி டிகாக்ஷன் இறக்கி விட்டான்.

அடுக்களையில் இருந்த டப்பாக்களைத் திறந்து பார்த்ததில் ஒரு டப்பாவில் பம்பாய் ரவை இருந்தது. வெங்காயம் போடாமல் அத்தைக்கும், வெங்காயம் போட்டுத் தங்களுக்கும் உப்புமா செய்துவிடும் எண்ணம் அவனுக்கு வந்தது.

'இந்து பாக சாஸ்திரம்' எனும் சமையல் புத்தகம் அவர்கள் வீட்டில் இருந்தது. அது பரணில் உள்ள ஒரு டிரங்குப் பெட்டியில் வெகு நாட்களுக்கு முன்னால் வைக்கப்பட்டது ஞாபகம் வர, அவன் ஓசைப்படாமல் பரணில் ஏறி அந்தப் பெட்டியை நகர்த்தினான். பூட்டப்படாத அந்தப் பெட்டியைத் திறந்தான். அதன் மூடியில் மூன்று சிறு அறைகள் இருந்தன. அவற்றுள் ஒன்றில் இருந்த ஓர் உறை அவனது கவனத்தைக் கவர்ந்தது. அதை எடுத்துப் பிரித்தான்.

(தொடரும்)

# அதிர்ஷ்ட போன்

போனில் உங்கள் அதிர்ஷ்டம். அடுத்த
வாரம் என்ன நடக்கும் என அறிந்திடலாம் போனில்
உங்களுக்கு கிடைத்திடும் எல்லாம்

☎ 0011 222 222 0+

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **31** மேஷம் | **32** ரிஷபம் | **33** மிதுனம் | **34** கடகம் | **35** சிம்மம் | **36** கன்னி |
| **37** துலாம் | **38** விருச்சிகம் | **39** தனுசு | **40** மகரம் | **41** கும்பம் | **42** மீனம் |

## பட்சி சாஸ்திரம்




ஒரு பண்டைய
அருட் முறை உங்கள் குறிப்பிட்ட
கேள்விகளுக்கு பதில் சொல்கிறது.

☎ 0011 222 222 043

## உற்றரும்-உறவினரும்

நண்பர்கள், உறவினர்கள், உடன்வேலை
செய்வோர் மற்றும் வாழ்க்கைதுணை
யாராகிருப்பினும் போனில்
தெரிந்து கொள்ளலாம்
அவர்களுக்கும் உங்களுக்கும்
எத்தனை பொருத்தம் என்று.

☎ 0011 228 888 829

இது சர்வதேச போன் கால். அங்கீகரிக்கப்பட்ட கட்டணங்கள்.
எம் க ஏ. யு.எஸ்.ஏ.



# ஓம் சரவணபவ

## பெனிபிட் பண்ட் லிமிடெட்



பதிவு அலுவலகம்: வேணுகோபால் பில்டிங். 26. சவிரிங் பஜார்.
சென்னை-600 003. (பாய் கடை பஸ் ஸ்டாப்)
பதிவு எண்:18-27360/94 (மத்திய அரசு அங்கீகாரம் பெற்ற கம்பெனி)

☎ 565296

பிக்சட் டிபாசிட்டுகளுக்கு கவர்ச்சிகரமான வட்டிகள் கிடைக்கும்
வட்டிக்கான காசோலைகள் முன்கூட்டியே வழங்கப்படும்
மேலும் பயனுள்ள திட்டங்களுக்கு நேரில் அணுகவும்

**சென்னை மாநகர**
**சொத்துக்கள் மீது**
**கடன் கிடைக்கும்**

வெள்ளி விடுமுறை





**நகைக்கடன் கிராம் 1க்கு**
**ரூ. 300 மாதவட்டி**
**ரூ. 1.95 மட்டும் வேறு**
**கட்டணம் இல்லை**

உச்ச வரம்பு கிடையாது
உறுப்பினராகி பயன் பெறுவீர்

வேலை நேரம்: காலை: 8.30 - 12.30 மாலை: 2.00 - 6.00



சேர்மன்: **P. பாலசுப்பிரமணியம்,**
முதன்மை அறங்காவலர்,
ஸ்ரீ கந்தக் கோட்டம், சென்னை-600 003.

**PB குரூப் கம்பெனி**

அருளுக்கும் ஓம் சரவணபவ! பொருளுக்கும் ஓம் சரவணபவ!




கஷாயம்தான் போட்டுக் குடுத்தே! ஐஸ்வர்யாராய் கையால பெப்ஸி வாங்கி குடிச்சமாதிரி ஜில்லுன்னு இருக்கு!
!!?


நான் சொல்லலை... யங்கா ஸ்மார்ட்டா என்னோட மேனேஜர்... இவர்தான்!




தலைவர் தேர்தலில் ஜெயித்தால் அங்கப் பிரதட்சணம் செய்வேன் என்கிறார்கள் சிலர் .... நான் கரும்புள்ளி செம்புள்ளி குத்திக்கொண்டு கழுதைமேல் ஊர்வலமே போகத்தயார்...!
!!?

VI A

HOME WORK

மண்டு! ஹோம் வொர்க்ல எல்லா கணக்கும் தப்பு!

ஹி...ஹி... என்ன இருந்தாலும் எங்கப்பாவுக்கு உங்கள மாதிரி கணக்குப் போட வருமா சார்!

!!?

பர்ஸ்

நம்ம ஏரியா மாதிரி கலெக்ஷன் வேறெங்கயும் ஆகிறதில்லீங்க...






# இத்தமிழ்ப் புத்தாண்டில் ஆயிரமாயிரம் மக்களுக்கோர்

# இன்ப அதிர்ச்சி

**முக்குவியல் பரிசு விழா**

**சீட்டு சேகரிப்பு**

ஏப்ரல் 1 முதல் ஏப்ரல் 14 வரை

இன்ப அதிர்ச்சியைக் கண்டறிய சுல்வரி சிட்ஸில் ஓர் அங்கத்தினராகுங்கள். மீண்டும் ஓர் முறை சுல்வரி சிட்ஸ் அளிக்கும் சீட்டு சேகரிப்புத் திட்டம் உங்களை மகிழ்ச்சியின் எல்லைக்கே கொண்டு செல்லும். சுல்வரியின் முக்குவியல் பரிசுவிழாவில் அங்கத்தினர்களுக்கும் அறிமுகம் செய்வோருக்கும் பாராட்டுப் பரிசுகள் காத்திருக்கின்றன. மேலும் ஏப்ரல் 14-ம் தேதி அங்கத்தினராக சேருவோருக்கு மட்டும் ஓர் பம்பர் பரிசும் உண்டு.

பொறுத்தில் எங்கள் சேவையினால் அதிக பட்ச இலாபம் உங்களுக்கு நிச்சயம் உண்டு என சுல்வரி சிட்ஸ் உறுதியளிக்கிறது. அதுமட்டுமல்ல, சென்னையிலேயே முதல் தடவையாக ஏலத்தொகையை, ஏலம் முடிந்த கையோடு கொண்டு செல்ல முடிவது சுல்வரியில் மட்டுமே. ஆம், எங்கள் வாடிக்கையாளர்களைத் திருப்தி செய்வது எங்கள் இயல்பாகவே ஆகிவிட்டதல்லவா?

எனவே முந்துங்கள்! முக்குவியல் பரிசு விழா முடிவதற்குள் சுல்வரி சிட்ஸில் அங்கத்தினராகுங்கள்.

## சந்தாதாரர் சீட்டு குருப்புகள்

| வ. எண் | சந்தா தொகை | காலம் | சீட்டின் மதிப்பு | அனுமதி தொகை | சந்தாதாரர் பரிசு | அறிமுகப்படுத்துவோர் பரிசு |
|---|---|---|---|---|---|---|
| 1 | 250 | 40 | 10,000 | 20 | லஞ்ச் பாக்ஸ் & வாட்டர் பாட்டில் | கட்டிங் டிஷ் (சிறியது) |
| 2 | 500 | 30 | 15,000 | 30 | | |
| 3 | 625 | 40 | 25,000 | 50 | ரைஸ் டிஷ் (பெரியது) | S.S. டோப் (சிறியது) |
| 4 | 1000 | 30 | 30,000 | 60 | | |
| 5 | 1000 | 50 | 50,000 | 100 | உருளி - காப்பர் பாட்டம் | தாளிக்கும் கரண்டி (காப்பர் பாட்டம்) |
| 6 | 1500 | 40 | 60,000 | 120 | | |
| 7 | 2500 | 30 | 75,000 | 150 | கோதாவரி குண்டு (காப்பர் பாட்டம்) | "ப்ளோரா டிஷ்" |
| 8 | 3000 | 30 | 90,000 | 180 | | |
| 9 | 4000 | 25 | 1,00,000 | 200 | S.S. டோப் செட் காப்பர் பாட்டம் (4 Nos.) | "லிட்வேர்" கடாய் |
| 10 | 5000 | 30 | 1,50,000 | 300 | | |
| 11 | 8000 | 25 | 2,00,000 | 400 | S.S. Dinner Set (31 Pcs) | ப்ரை பான் (காப்பர் பாட்டம்) |
| 12 | 10000 | 50 | 5,00,000 | 1000 | 3 Gm. தங்க காசு | "Khao Piyo" டிஃபின் கேக் |

சந்தாதாரர் பரிசு






















**உச்ச வரம்பு ஏலம் 30% முன் அனுமதி பெறப்பட்டது.**

## 13. கபால பைரவர்

அருள்மொழித்தேவி "குழந்தாய்! விக்கிரமா! இதோ வந்துவிட்டேன்!" என்று அலறிக் கொண்டு அலை கடலிலே பாய்ந்தாள் என்ற விவரத்தைக் கேட்ட போது விக்கிரமனுடைய கண்களில் நீர் ததும்பி வழிய ஆரம்பித்து விட்டது. அச் சமயம் கடல்களுக்கப்பால் எங்கேயோ தான் இருக்கும் விஷயம் தன் தாயின் நினைவுக்கு வந்து அதன் பயனாகத்தான் அப்படி அவள் வெறிகொண்டு பாய்ந்திருக்க வேண்டும் என்று விக்கிரமன் எண்ணினான்.

பொன்னன், தானும் பரஞ்சோதி அடிகளும் தேவியைத் தேடியதைப் பற்றிச் சொல்லி வந்த போது விக்கிரமன், "பொன்னா! சீக்கிரம் சொல்லேன்? மகாராணி அகப்பட்டாரா?" என்று கதறினான்.

"இல்லையே, மகாராஜா! அகப்படத் தானே இல்லை! அப்புறம் மகாராணியைத் தரிசிப்பதற்கு இந்தப் பாழும் கண்கள் கொடுத்து வைக்கவில்லையே!" என்று பொன்னனும் கண்ணீர் விட்டான்.

"பின்னே மகாராணி உயிரோடுதான் இருக்கிறார் என்று சற்று முன்பு சொன்னாயே? எனக்கு ஆறுதலுக்காகச் சொன்னாயா? - ஐயோ! இந்தச் செய்தியைக் கேட்கவா நான் கப்பலேறிக் கடல் கடந்து வந்தேன்!" என்று விக்கிரமன் புலம்பினான்.

அப்போது பொன்னன், "பொறுங்கள் மகாராஜா! குறையையும் கேளுங்கள். மகாராணி உயிரோடுதான் இருக்கிறார்; சந்தேகமில்லை, அவர் இருக்கும் இடத்தைக் கண்டு பிடிக்கத்தான் முயன்று கொண்டிருக்கிறேன். நீங்களும் வந்து விட்டீர்கள், இனிமேல் என்ன கவலை?" என்றான் பொன்னன்.

பிறகு நடந்த சம்பவங்களையும் தான் அறிந்த வரையில் விவரமாகக் கூறலுற்றான் :

அலைகளுக்கு மத்தியில் அடர்ந்த இருளில் பரஞ்சோதி அடிகளும் பொன்னனும் அருள்மொழி ராணியை வெகு நேரம் தேடினார்கள். மகாராணி அகப்படவில்லை.

"பொன்னா! தேவியைச் சமுத்திரராஜன் கொண்டு போய் விட்டான்!" என்று பரஞ்சோதி அடிகள் துக்கம் ததும்பும் குரலில் கூறினார். பொன்னன் 'ஓ' என்று அழுதான்.

இனிமேல் ஒருவேளை அகப்பட்டாலும் உயிரற்ற உடல்தான் அகப்படுமென்று இரண்டு பேருடைய மனத்திலும் பட்டு விட்டது. உயிரற்ற உடலை அலைகளே கரையில் கொண்டு வந்து தள்ளி விடும். இனியும் தேடுவதில் ஒரு உபயோகமுமில்லை. இவ்வாறு மனத்தில் எண்ணிக் கொண்டு இரண்டு பேரும் கரை ஏறினார்கள். அவர்கள் கரைக்கு வந்த சமயத்தில் கிரகணம் விட ஆரம்பித்திருந்தது. கொஞ்சங் கொஞ்சமாக அந்தகாரத்தை அகற்றிக் கொண்டு சூரியனுடைய ஒளி நாலாதிக்குகளிலும் ஸ்தாபித்து வந்தது. மாரிக்காலத்து மாலை வேளையைப் போல் தோன்றிய அச்சமயத்தில், பரஞ்சோதியாரும் பொன்னனும் கரையேறிய போது அங்கே வெடவெடவென்று குளிரில் நடுங்கிக் கொண்டு நின்ற பரஞ்சோதியாரின் பத்தினியும் வள்ளியும், "வாருங்கள்! சீக்கிரம் வாருங்கள்!" என்று கூவினார்கள். அவர்கள் விரைந்து அருகில் நெருங்கியதும், யாரோ ஒரு ஒற்றைக் கை மனிதன் அப்போதுதான் கடலிலிருந்து கரையேறியதாகவும், அவன் அந்த ஒற்றைக் கையினால் ஒரு ஸ்திரீயைத் தூக்கிக் கொண்டு போனதாகவும், மங்கிய வெளிச்சத்தில் பார்த்த போது, அருள்மொழி ராணி மாதிரி இருந்ததென்றும், தாங்கள் கையைத் தட்டிக் கூச்சல் போட்டுக் கொண்டிருக்கும்போதே அம் மனிதன் ஜனக் கூட்டத்தில் சட்டென்று மறைந்து போய் விட்டதாகவும் சொன்னார்கள். ஒரே படபடப்புடன் பேசிய அவர்களிடமிருந்து மேற்கண்ட விவரங்களைத் தெரிந்து கொள்வதற்கே சற்று நேரம் ஆகி விட்டது. முன்னால் அலை கடலில் அருள்மொழி ராணியைத் தேடிய பொன்னனும் பரஞ்சோதியாரும் இப்போது மறுபடியும் ஜனசமுத்திரத்தில் ராணியைத் தேடத் தொடங்கினார்கள். இதுவும் நிஷ்பலனே ஆயிற்று. மாநிலத்திலுள்ள மாந்தர் யாவரும் திரண்டு வந்திருந்தது போல் தோன்றிய அந்தப் பெரிய ஜனக்கூட்டத்தில் ஒற்றைக் கை மனிதனையும் அவர்கள் காண வில்லை! அவன் ஒரு கையினால் தூக்கிச்

# பார்த்திபன்

சென்ற அருள்மொழி ராணியையும் காண வில்லை. எவ்வளவோ தேடியும் அகப் படாமற் போகவே, திருவெண்காட்டு நங்கை யும் வள்ளியும் பார்த்ததாகச் சொன்னதி லேயே அவர்களுக்கு அவநம்பிக்கை உண் டாயிற்று. அது ஒருவேளை அவர்களுடைய பிரமையாயிருக்கலாமென்று நினைத்தார் கள். ஆனால், அம் மூதாட்டியும் வள்ளி யுமோ தாங்கள் நிச்சயமாய்ப் பார்த்ததாக ஆணையிட்டுக் கூறினார்கள்.

மேற்கண்ட வரலாற்றைச் சொல்லி முடித்த பிறகு அருள்மொழி ராணி இன்னும் உயிரோடுதானிருக்கிறார் என்று தான் நம்பு வதற்குக் காரணம் என்னவென்பதையும் பொன்னன் கூறினான். வள்ளியும் அவனும் சில தினங்கள் வரையில் திருச்செங்காட் டாங்குடியிலிருந்துவிட்டு, அருள்மொழி ராணியைப் பற்றிய மர்மத்தைத் தெரிந்து கொள்ளாமலே திரும்பி உறையூர் சென் றார்கள். அங்கே போய்ச் சில நாளைக்கெல்லாம் சிவனடியார் வந்து சேர்ந்தார். மகாராணியைப் பற்றிய வரலாற்றைக் கேட்டு அவர் பெருந் துயரம் அடைந்தார். ஒற்றைக் கை மனித னைப் பற்றிய விவரம் அவருக்குப் பெரும் வியப்பையளித்தது. வள்ளியைத் திரும்பத் திரும்ப அவளுக்கு ஞாபகம் இருக்கும். விவரத்தையெல்லாம் சொல்லும்படி கேட் டார். கடைசியில் அவர், "பொன்னா! வள்ளி சொல்லுவதில் எனக்குப் பூரண நம் பிக்கை இருக்கிறது. ராணியை ஒற்றைக் கை மனிதன்தான் கொண்டு போயிருக்கிறான். ராணி உயிருடன் இருக்கிறாள் என்பதிலும் சந்தேகமில்லை. அவள் இருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க வேண்டியது நம்முடைய பொறுப்பு" என்றார். பிறகு அவர், "அந்த ஒற்றைக் கை மனிதன் யார் தெரியுமா!" என்று கேட்டார். "தெரியாதே சுவாமி!" என்று பொன்னன் சொன்ன போது சிவ னடியார், "அவன்தான் கபால ருத்திர பைர வன். கபாலிக மதக் கூட்டத்தின் தலைமைப் பூசாரி. தமிழகத்தில் நரபலி என்னும் பயங் கரத்தை அவன் பரப்பிக் கொண்டு வருகி றான். அதைத் தடுப்பதற்குத்தான் நான் பிர யத்தனப்பட்டுக் கொண்டு வருகிறேன். எங் கேயோ ஒரு இரகசியமான இடத்தில் அவன் ரணபத்திர காளி கோயில் கட்டியிருக்கிறானாம். அந்த இடத்தைக் கண்டுபிடித்தோமா னால், அங்கே அநேகமாக நமது ராணியைக் காணலாம்" என்றார்.

இதைக் கேட்டுப் பொன்னன் நடு நடுங்கிப் போனான். "ஐயோ! மகாராணியை ஒருவேளை காளிக்குப் பலி கொடுத்திருந் தால்..." என்று அலறினான். "இல்லை பொன்னா, இல்லை! கேவலம் ஒரு பலிக் காகக் கபால பைரவன் இவ்வளவு சிரமம் உள்ள ஒரு காரியத்தில் தலையிட்டிருக்க மாட்டான். வேறு ஏதோ முக்கிய அந்தரங்க நோக்கம் இருக்கிறது. ஆகையால், ராணியை உயிரோடு பத்திரமாய் வைத்திருப்பான். ரணபத்திர காளி கோயில் இருக்குமிடத்தை நாம் கண்டுபிடிக்க வேண்டும்" என்றார் சிவனடியார்.

# கனவு

அமரர் கல்கி

இதன் மேல் பல்லவ, சோழநாடு களைப் பொன்னனும் சிவனடி யாரும் இரண்டு பகுதி களாகப் பிரித்துக் கொண்டு, ஒவ்வொரு பகுதியை ஒவ்வொருவர் தேடுவது என்று தீர்மானித் துக் கொண்டார்கள். பொன்னன் வள்ளி யைத் தன்னுடைய அத்தை வீட்டில் விட்டு விட்டு, சோழநாடு முழுவதும் தேடி அலைந் தான். பிறகு, காவேரியின் அக்கரைக்கு வந்து தேடத் தொடங்கினான்.

மாதக் கணக்காகத் தேடி அலைந்த தற்குக் கடைசியாக நாலு நாளைக்கு முன்பு தான் பலன் கிடைத்தது. அந்தக் காட்டாற் றின் கரையோடு பொன்னன் மேற்கே மூன்று, நாலு காத தூரம் போன பிறகு ஒரு பெரிய மலையின் அடிவாரத்திற்கு வந்து சேர்ந்தான். அந்த மலை அடிவாரத்தில் வெகு தூரம் அடர்த்தியான காடு சூழ்ந் திருந்தது. அவன் வழி பிடித்துக் கொண்டு வந்த காட்டாறானது அந்த மலை உச்சியி லிருந்துதான் புறப்பட்டிருக்க வேண்டு மென்றும், அந்த மலை கொல்லிமலையின் ஒரு பகுதியாயிருக்கலாமென்றும் பொன் னன் ஊகித்தான். அந்த வனப்பிரதேசத் தைப் பார்த்தவுடனேயே, இதற்குள் எங் கேயாவதுதான் ரணபத்திர காளியின் கோயில் இருக்க வேண்டுமென்று பொன்னனுக்குத் தோன்றியது. அந்த மலைக்கு உட்புறத்தில்

காட்டுமிராண்டி ஜனங்கள் வசிப்பதாகப் பொன்னன் கேள்விப்பட்டிருந்தான். அவர்கள் சில சமயம் மலைக்கு வெளியில் வந்து நரபலி கொடுப்பதற்காக மனிதர்களைக் கொண்டு போவதுண்டு என்றும் கேள்விப் பட்டிருந்தான். ஆகவே, பொன்னன் அந்த வனப் பிரதேசத்தில் நாலாபுறத்திலும் தேடி அலைய ஆரம்பித்தான். ஆனால், எந்தப் பக்கத்திலும் அதிக தூரம் காட்டுக்குள் புகுந்து போவதற்குச் சாத்தியப்படவில்லை.

கடைசியாக, காட்டாறு பெருகி வந்த வழியைப் பிடித்துக் கொண்டு போனான். போகப் போக ஆறானது குறுகிச் சிறு அருவியாயிற்று. அந்த அருவியின் வழியாக மலைமேல் ஏறிச் செல்வது அவ்வளவு சுலபமான காரியமாக இல்லை. சில இடங்களில் பெரிய பெரிய பாறைகள் கிடந்தன. சில இடங்களில் ஆழமான மடுக்கள் இருந்தன. இன்னும் சில இடங்களில் முள் மரங்கள் அடர்த்தியாகப் படர்ந்து, புகுந்து போக முடியாமல் செய்தன. வேறு சில இடங்களில் பாறையில் செங்குத்தாக ஏற வேண்டியதாயிருந்தது. பொன்னன் இதற்கெல்லாம் சிறிதும் சளைக்காமல் ஏறிச் சென்று கொண்டிருந்தான்.

காலையிலிருந்து மத்தியானம் வரையில் இவ்விதம் ஏறி மிகவும் களைத்துப் போன பொன்னன் கடைசியாக ஒரு பாறையின் மீது உட்கார்ந்தான். "இனிமேல் இறங்கிப் போக வேண்டியதுதான். வேறு வழியில்லை. இராத்திரியில் இந்த வனப் பிரதேசத்துக்குள் அகப்பட்டுக் கொண்டால் காட்டு மிருகங்களுக்கு இரையாக நேரலாம்" என்று அவன் எண்ணிக் கொண்டிருந்த போது, திடீரென்று மனிதப் பேச்சுக் குரல் கேட்டது. அந்த நிர்மானுஷ்யமான காட்டில் மனிதக் குரலைத் திடீரென்று கேட்டதில் பொன்னனுக்கு ஒரு பக்கம் திகிலுண்டாயிற்று. இன்னொரு பக்கத்தில் ஒருவேளை நாம் தேடி வந்த காரியம் சித்தியாகப் போகிறதோ என்ற எண்ணத்தினால் ஆவலும் பரபரப்பும் அளவில்லாமல் பொங்கின. எதற்கும் ஜாக்கிரதையாயிருக்கலாம் என்று பொன்னன் பக்கத்தில் நீட்டிக் கொண்டிருந்த ஒரு பாறைக்குக் கீழே சரேலென்று ஒளிந்து கொண்டான்.



சற்று நேரத்துக்கெல்லாம் மேலேயிருந்து இரண்டு மனிதர்கள் இறங்கி வருவது தெரிந்தது. ஆனால் எப்பேர்ப்பட்ட மனிதர்கள்? - அவர்கள் மனிதர்கள்தானா? - ஒருவன் மனிதன்தான், சந்தேகமில்லை. ஆனால், அவ்வளவு பயங்கரத் தோற்றங்கொண்ட மனிதனை அதற்கு முன்னால் பொன்னன் பார்த்ததேயில்லை. அவனுக்கு அந்தப் பயங்கரத் தோற்றத்தை அளித்தவை முக்கியமாக அவனுடைய உருட்டி விழிக்கும் பார்வையுடைய சிவந்த கண்கள்தான். இன்னும், அவனது உயர்ந்து வளர்ந்த உடலின் ஆகிருதி, நீண்ட பெரிய மீசை, தலையில்



அடர்த்தியாக வளர்ந்து கருட்டை கருட்டையாகத் தொங்கிய செம்பட்டை மயிர், நெற்றியில் அப்பியிருந்த செஞ்சந் தனம், அதன் மத்தியில் இரத்தச் சிவப்பான குங்குமப் பொட்டு, - இவையெல்லாம் அவ னுடைய தோற்றத்தின் பயங்கரத்தை அதிக மாக்கின. அவன் ஒரு கரிய கம்பளிப் போர் வையைப் போர்த்தியிருந்தான். ஒரு பாறை யிலிருந்து இன்னொரு பாறைக்குத் தாண் டிய போது அந்தப் போர்வை நழுவிற்று. அப்போது பொன்னன் "ஹோ!" என்று கதறி விட்டிருப்பான். ஆனால், பயத்தினாலேயே அவனுடைய தொண்டையிலிருந்து சப்தம் வரவில்லை. பொன்ன னுக்கு அவ்வளவு ஆச்சரி யத்தையும், பயத்தையும் உண் டாக்கிய காட்சி என்னவென்றால், அந்த மனிதனுக்கு ஒரு கை இல்லாமலிருந் ததுதான்! அதாவது வலது தோளுக்குக் கீழே முழங்கைக்கு மேலே அவனுடைய கை துண் டிக்கப்பட்டு முண்டமாக நின்றது.

''அருள்மொழி ராணியைத் தூக்கிச் சென்றதாக வள்ளியும் திருவெண்காட்டு



## அருள்வாக்கு

அந்தக் காலத்தில் ரொம்பவும் நீசத்தனமான ஒரு கார்யத்தைப் பண்ணினவனைக் கரும்புள்ளி செம்புள்ளி குத்திக் கழுதை மேல் ஏற்றி ஊர்வலம் விடுவது வழக்கம். தாங்கமுடியாத அவமானத்தில் தப்பு நன்றாக மனஸில் பட்டு மறுபடி அம்மாதிரி அவன் பண்ணாமலிருப்பதற்குத்தான் இப்படிச் செய்தார்கள்.

குற்றவாளிகளையும் கௌரவமாக நடத்த வேண்டும், ஜெயிலை 'ட்ராவலர்'ஸ் பங்களா' மாதிரி ஸௌக்ய மாக்கித் தர வேண்டும் என்று ஆரம்பித்தால் இந்த அன்-எம்ப்ளாய்மெண்ட் யுகத்தில் எவருக்கும் அங்கேதான் போய் ஸுகவாஸம் பண்ணலாமே என்று தூண்டிவிடுகிற மாதிரி ஆகிறது! மநுஷ்யாபிமானம் என்பது தப்புப் பண்ணுபவன் நல்ல மநுஷ்யனாக முன்னேறுவதைக் கெடுப்பதற்கே தூண்டுகோலாகிவிடக் கூடாது; எதிலும் பாத்ர மறிந்து செய்ய வேண்டும் என்பதற்காகச் சொல்கிறேன்.

பழைய நாளில் கழுதைமேல் ஏறினவனுக்கும், ஃபோர்ஜரி பண்ணினவனுக்கும் ஸபையில் இடமில்லை. இதை, "கழுதை யேறினாரையும் கூடலேகை செய்தாரையும் குடவோலை எழுதிப்புக இடம் பெறாத தாகவும்" என்று சாஸனத்தில் சொல்லியிருக்கிறது. "கூடலேகை" என்றால் பொய்க் கையெழுத்து. "லேகை" என்றால் எழுதப்படுவது, "கூடம்" என்றால் பொய், மோசடி; fraud என்பது. கூடலேகை என்பது ஃபோர்ஜரி.

இவர்கள் "ஸபைத் தேர்தலுக்குத் தகுதி பெறாதவர்கள்" என்பதைத்தான் "குடவோலை எழுதிப் புக இடம் பெறாத"வர்கள் என்று சொல்லியிருக்க வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

அம்மையும் கூறியவன் இவன்தான்! 'கபால ருத்திர பைரவன்' என்று சிவனடியார் கூறியவனும் இவன்தான்!" என்று பொன்னனுக்கு உடனே தெரிந்து போய் விட்டது.

கபால பைரவனின் தோற்றம் மட்டுமல்ல, அவனுடன் இருந்த இன்னொரு மனிதனின் தோற்றமும் பொன்னனுக்குத் திகைப்பை அளித்தது. ஆமாம்; அவனும் மனிதன்தான் என்பது அருகில் வந்த போது தெரிந்தது. ஆனால், அவன் விபரீதமான குள்ள வடிவமுள்ள மனிதன். பத்து வயதுப் பையனின் உயரத்துடன், நாற்பது வயது மனிதனின் முதிர்ந்த முகமுடையவனாயிருந்தான். அவ்வளவு குள்ளனாயிருந்தும் அவன் கபால பைரவனைப் பின்பற்றி அந்த மலைப் பாறைகளில் அதிவிரைவாகத் தாவித் தாவிச் சென்றது. பொன்னனுடைய வியப்புடன் கலந்த திகிலை அதிகரிப்பதாயிருந்தது.

பொன்னன் கூறிய வரலாற்றில் மேற்கண்ட இடத்துக்கு வந்ததும், விக்கிரமனும் அளவில்லாத ஆவலைக் காட்டினான். அந்தக் குள்ளனை நன்றாக விவரிக்கும்படி சொன்னான். பொன்னன் அவ்விதமே விவரித்து விட்டு, "மகாராஜா! என்ன விசேஷம்? இம்மாதிரி யாரையாவது நீங்கள் வழியில் பார்த்தீர்களா, என்ன?" என்று கேட்டதற்கு, விக்கிரமன், "ஆமாம்; பொன்னா, அதைப் பற்றி பிறகு சொல்கிறேன். உன்னுடைய வரலாற்றைச் சொல்லி முடி." என்றான்.

"இனிமேல் அதிகம் ஒன்றுமில்லை மகாராஜா! அருவிப் பாதையில் அவர்கள் இருவரும் வெகுதூரம் இறங்கிப் போய் விட்டார்கள் என்று தெரிந்து கொண்டு நான் மேலே வந்தேன். அவர்கள் இருப்பிடத்தையும் காளி கோயிலையும் கண்டுபிடித்து விடலாம்; ஒரு வேளை மகாராணியையே பார்த்தாலும் பார்த்து விடுவோம் - என்ற ஆசையுடன் அந்த அருவிப் பாதையைப் பிடித்துக் கொண்டு மேலே ஏறினேன். ஆனால், சிறிது நேரத்துக்கெல்லாம் என் ஆசை பாழாகி விட்டது. ஏனென்றால், மேலே கொஞ்ச தூரம் போனதும் அருவியானது மூன்று

ஆள் உயரத்திலிருந்து செங்குத்தாக விழுந்தது. பாறையும் அங்கே செங்குத்தாக இருந்தது. அவ்விடத்தில் பாறையின் மேலே ஏறுவதோ, மேலே இருந்து கீழே இறங்குவதோ மனிதர்களால் முடியாத காரியம். அப்படியானால் இவர்கள் எப்படி வந்தார்கள்? மேலேயிருந்து யாராவது கயிறு அல்லது நூலேணி தொங்க விட்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால், அந்த இடத்துக்கும் நான் ஒளிந்திருந்த இடத்துக்கும் மத்தியில் எங்கேயாவது இரகசிய வழி இருக்க வேண்டும். ஆன மட்டும் தேடிப் பார்த்தேன் மகாராஜா, பிரயோஜனப்படவில்லை. எப்படியும் போனவர்கள் திரும்பி வருவார்களென்று நினைத்து, மலை அடிவாரத்துக்கு வந்து மூன்று தினங்கள் காத்திருந்தேன். போனவர்கள் திரும்பி வரவில்லை. அதன் மேல் சிவனடியாரிடம் தெரிவித்து யோசனை கேட்கலாமென்று கிளம்பி வந்தேன். நல்ல சமயத்திலே வந்தேன் மகாராஜா!" என்று பொன்னன் முடித்தான்.

"ஆமாம், நல்ல சமயத்தில்தான் வந்தாய், பொன்னா! இல்லாவிட்டால் இத்தனை நேரம் நான் ஒருவேளை என் தந்தையிருக்குமிடம் போய்ச் சேர்ந்திருப்பேன்" என்றான் விக்கிரமன்.

"எனக்கும் ஒருவேளை அந்தக் கதிதான் நேர்ந்திருக்கும், மகாராஜா! எப்படிப் பெருகி வந்தது பெருவெள்ளம், அவ்வளவும் அந்த மலையிலிருந்துதானே வந்திருக்கிறது? மழை பிடித்த போது அங்கே நான் அகப்பட்டுக் கொண்டிருந்தேனேயானால்... தங்களை எங்கே பார்த்திருக்கப் போகிறேன்! மகாராணியைத்தான் எப்படித் தேடப் போகிறேன்?"

"மகாராணி அந்த மலையில் இருக்கிறார் என்று உனக்கு நம்பிக்கை இருக்கிறதா பொன்னா?" என்று கேட்டான் விக்கிரமன்.

"ஆமாம், மகாராஜா! முன்னே, சிவனடியார் சொன்ன போது கூட எனக்கு அவ்வளவு நம்பிக்கைப்படவில்லை. ஆனால் அந்த ஒற்றைக் கை பைரவனைப் பார்த்த பிறகு, நிச்சயமாக மகாராணி பிழைத்துத்தான் இருக்கிறார் என்ற நம்பிக்கை உண்டாகிறது."

"எப்படியோ என் உள்ளத்திலும் அந்த நம்பிக்கை இருக்கிறது; பொன்னா! என்னைப் பார்க்காமல் அம்மா இறந்து போயிருப்பார் என்று என்னால் நினைக்க முடியவேயில்லை. சென்ற ஆறு மாதமாக மகாராணி என் கனவில் அடிக்கடி தோன்றி வருகிறார். தை அமாவாசையன்று என் பெயரைக் கூவிக் கொண்டு கடலில் பாய்ந்ததாகச் சொன்னாயே, கிட்டத்தட்ட அந்த நாளிலிருந்துதான் அடிக்கடி அவர் கனவில் வந்து என்னை அழைக்கிறார். அவர் உயிரோடுதானிருக்க வேண்டும். ஐயோ, இந்த நிமிஷத்தில் கூட, அவர் என்னைக் கூவி அழைக்கிறார் பொன்னா! அம்மா! அம்மா!..." என்று அலறினான் விக்கிரமன்.

அப்போது பொன்னன் சட்டென்று விக்கிரமனுடைய வாயைப் பொத்தி, "மகாராஜா! பொறுங்கள்!" என்றான், பிறகு, "அதோ கேளுங்கள், ஏதோ சப்தம் கேட்கிறது, மனிதக் குரல்!" என்று காதோடு கூறினான்.

உண்மையிலேயே அந்த இருண்ட மண்டபத்துக்கு வெளியே யாரோ இருவர் பேசிக் கொண்டிருக்கும் சப்தம் கேட்டது.

(தொடரும்)

## கிராமச்சுவை!

**அக்கரைப்பட்டி - எங்கள் கிராமம். இங்கு கையும் களவுமாய் மாட்டிக் கொண்ட குற்றவாளிக்குத் தீர்ப்புக் கொடுக்க பெருமாள் கோவிலில் ஊர் மக்கள் ஒன்று கூடுவார்கள். குற்றவாளி ஒப்புக்கொண்டுவிட்டால் சரி; இல்லையேல் பின்னி எடுத்து விடுவார்கள். அதனால் பெரும்பாலும் ஒப்புக் கொண்டு விட்டு, அபராதம் கட்டத் தயாராவார்கள். '1000 ரூபாய் அபராதம்' என்பார் தலைவர். "ஐயா, தாங்காது" என்று காலில் விழுவான் குற்றவாளி. பிறகு 900, 800, 700, 500.... இப்படி ஒவ்வொரு "ஐயா, தாங்காது" - காலில் விழும் வைபவத்துக்கும் 'ரேட்' குறைந்து கொண்டே வந்து 10 ரூபாயில் நிற்கும். குற்றவாளி ஒப்புக் கொண்டு, 10 ரூபாய்க்கு வெற்றிலைப் பாக்கு வாங்கி வந்து பஞ்சாயத்தாருக்குத் தந்து விட்டு விடுதலை பெறுவான்.**

**அத்தனை முறை, ஊர் மக்கள் எதிரே காலில் விழுந்தவன் இன்னொரு குற்றம் செய்வானா என்ன?**

**— சுவர்ணம்துரை, சென்னை - 88.**



ஐஸ்வர்யாவுடன் ஓர் அவசரப் பயணம் என்பது லேசில் கிடைக்கிற விஷயமா? அதிகாலை ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து அவரியடித்துக் கொண்டு சத்யா ஸ்டூடியோவுக்குச் செல்லும்போது (பெப்ஸி நிறுவனம் அங்குதான் நம்மை ஏழு மணிக்கு வரச் சொன்னது) சரியாக ஏழு மணி! பார்த்தால் அங்கே ஒருவரையும் காணோம். ஒருவேளை நமது வாட்சில் தான் கோளாறோ! எல்லோரும் புறப்பட்டுப் போய்விட்டார்களோ! ஒரே படபடப்பு.

காத்திருந்து விசாரித்தபோது "ஷார்ப்பா ஒன்பது மணிக்குச் சோழாவிலிருந்து ஸ்டார்ட் பண்றோம் சார். நீங்க அங்க கூட வந்து ஜாயின் பண்ணிக்கலாம்!" என்றார் பெப்ஸி அலுவலக ரமேஷ்.

ஒன்பது மணி. ஹோட்டல் சோழா. பெப்சிக்காரர்களின் வாசனைகூட அங்கே இல்லை.

ஐஸ்வர்யாவின் தங்கைகள் போலிருந்த ரிசப்ஷன் பெண்கள் "வந்துடுவாங்க. உட்காருங்க" என்றனர்.

மறுபடியும் காத்திருப்பு.

ஒருவழியாக பெப்சிக்காரர்கள் வந்து சேர்ந்தார்கள். "என்ன சார், பொறப்படறோமா, இல்லியா?"

"ஒய் நாட்? ஷ்யூர்... இப்ப பொறப்பட்டுடலாம், உட்காருங்க. இதோ பாருங்க... நாம போகப் போற வீடுங்களோட அட்ரஸ்...!"

"நாம மட்டும்தான் போகப் போறோமா? ஐஸ்வர்யா வரலியா?"



"இந்தக் கிண்டல்தானே வேண்டாம்ங்கிறது. அவுங்களுந்தான் வர்றாங்க!"

"இந்த அட்ரஸையெல்லாம் எப்படித் தேர்ந்தெடுத்தீங்க?"

"பெப்சியைப் பத்தி நாங்க 'ஸ்லோகன்' எழுதச் சொல்லி விளம்பரப்படுத்தியிருந்தோம். ஒன்பதாயிரம் பேர் எழுதினாங்க. அவங்கள்ல இருந்து இவங்களை செலக்ட் செஞ்சோம்."

"ஐஸ்வர்யா போய் இந்த வீடுங்கள்ல என்ன செய்யப் போறாங்க?"

"போனவுடனே பெப்சி கேட்பாங்க!"

"அவங்க வீட்ல பெப்சி இருக்கணுமே?"

"எங்க ஆளுங்க அங்க முன்கூட்டியே போய் எல்லா ஏற்பாடுகளும் செஞ்சிருப்பாங்களே!"

மணி 10.10. லிப்ட் கதவு சிணுங்கிக்கொண்டே திறந்தபோது, ஐஸ்வர்யா ராய் வந்தேவிட்டார்! கியூலாட்ஸ் (culottes) டிரஸ்.

எல்லோரும் அம்பாசிடர் கார்களில் ஏறிக் கொள்ள, இரண்டு கான்டசா (ஏ.ஸி.) கார்களுக்குத்தான் ஐஸ்வர்யா அன்ட் கோவைச் சுமக்கும் பாக்கியம் கிட்டியது!

# ஐஸ்வர்யா ஜில் விஜயம்!

அண்ணாநகர் கீதாஞ்சலி காலனி! ஐஸ்வர்யா ராய் வருகைக்காக ஏராள எதிர்பார்ப்புடன் காத்திருந்தது.

ப்ரியதர்சினி பிரேம் குமாரின் வீட்டுக்குப் புயலென ஒரு விசிட். ஊஹூம்! புயலினும் வேகம் என்று சொல்ல வேண்டும் - பின்னே, மூன்றே நிமிடங்களில் ஒருவர் வீட்டுக்கு மாடியேறிப் போய், புன்னகைத்துப் பெப்ஸி குடித்துத் திரும்புவ தென்றால் சும்மாவா? வழியெல்லாம் ஆட்டோகிராஃப் வேட்டைக்காகக் காத்திருந்த இளைஞர் - இளைஞிகள் பட்டாளம், இப்படி ஐஸ்வர்யா பிடி. உஷாவையும் தோற்கடித்த அதிசயத்தைக் கண்டு ஸ்தம்பித்தது.

ஆனால் ஐஸ்வர்யாவின் வேகத்தையும் தோற்கடித்தனர் ஒரு மாருதியில் வந்த பெண்மணிகள். அவரை அண்ணாநகரில் பார்க்க முடியாமல் போனதால் காரிலேயே துரத்தி வந்து, கான்டஸாவை 'ஓவர்டேக்' செய்து, அசோக் நகர் 'ஹாக்ட்டி'ல் பார்த்தே விட்டனர்!

திருவேற்காட்டிலிருக்கும் உதவும் கரங்கள் சமூக சேவை மையம். வித்யாகரோடு மென்மையாகக் கைகுலுக்கிவிட்டு, அநாதைக் குழந்தைகள் காத்திருந்து கொடுத்த பூச்செண்டையும் சந்தோஷமாக வாங்கிக் கொண்டு சுற்றிப் பார்த்தார் ஐஸ்வர்யா.

எயிட்ஸால் பாதிக்கப்பட்ட பிரின்ஸ் என்ற கைக்குழந்தையைத் தயக்கமில்லாமல் கைகளில் வாங்கிக் கொண்டு போலித்தனமில்லாமல் கொஞ்சினார். பெப்சிக்காரர்கள் கொண்டு வந்திருந்த சின்னச் சின்ன வாட்டர் பாட்டில்களை வினியோகித்து, மனநிலை பாதிக்கப்பட்ட ஒரு பெண்ணுக்குத் தமிழில் பதில் சொல்லி... - இங்கே 'ஐஸ்' நிஜமாகவே உருகியது நெகிழ்ச்சியாக இருந்தது.

மீண்டும் சேத்துப்பட்டு ஹாரிங்டன் ரோட்டிலுள்ள ஒரு ஃப்ளாட். வழக்கமான கோஷங்கள். வழக்கமான வரவேற்பு. வழக்கம் போல் எங்களுக்கு உள்ளே நுழைய இடமில்லை.

புஷ்பலதா என்கிற வேலைக்காரச் சிறுமி ஒரேயொரு ரோஜாப் பூவை வைத்துக் கொண்டு வெளியில் நிற்க,

"எதுக்கம்மா இந்தப் பூவு? ஐஸ்வர்யாவுக்குக் குடுக்கவா?" என்றோம்.

"இல்ல. இது எனக்கு வேணும். ஆமா... ஆரு ஐஸ்வர்யா? உள்ள போனாங்களே, அந்த அக்காவா?"

புஷ்பலதாவுக்குத் தெரியாவிட்டால் என்ன... ஐஸ்வர்யா ராயின் இரண்டு நாள் விசிட் சென்னைவாசிகள் செய்த பாக்கியம்! ஆனால், ஐஸ்வர்யா வருகையால் கௌரவ மடைந்த வீடுகளை விடவும், அவருடன் கை குலுக்கிய பாக்கியசாலிகளை விடவும்; அவரிடம் ஆட்டோகிராஃப் பெற்ற அதிர்ஷ்டசாலிகளை விடவும்; அவர் பார்வை பட்டே புளகாங்கிதமான புண்ணியவான்களைவிடவும் அதிக லாபமடைந்தது யார் தெரியுமா?

ஐஸ்வர்யா விசிட் செய்யப் போகும் இடங்களையெல்லாம் முன்கூட்டியே மோப்பம் பிடித்துக் கொண்டு, அங்கெல்லாம் தங்கள் வேன்களைக் கொண்டு வந்து நிறுத்தி விற்பனை செய்து கொண்டிருந்த கோகோகோலா காரர்கள்தான்!

— ப்ரின்ஸ்

வண்ணப்படங்கள் : யோகா

# தேவைகள்... நியாயங்கள்!

மாசி மாசத்து முரட்டு வெய்யில் சற்றே குறையத் தொடங்கியிருந்தது. மதியம் முழுவதும் ஆர்க்யூமெண்ட். சுகந்தி எம்.ஏ., பி.எல். என்ற பெயர்ப் பலகையில் கை வைத்து, கதவைத் தள்ளி உள்ளே போனதும் ஜூனியர் சமயோசிதமாக மின்விசிறியைச் சுழல விட்டு 'ஜில்' தண்ணீர் கொடுத்தாள். 'கடகட'வென்று குடித்து விட்டு, கண்களை மூடித் திறந்த சுகந்தியின் எதிரில் சதீஷ் - தோழி கமலாவின் மகன்.

"ஹலோ" சந்தோஷமாய்க் கூவினாள். சதீஷ் உட்கார்ந்தான். டெலிபோன் அலறியது. சுப்பாரெட்டி லைனில் வந்தார். "நமஸ்காரம் ரெட்டிகாரு. பாக உன்னாறா. நீங்க எதுவும் கவலைப்படாதீங்க. உங்க நிலம் உங்களுக்குத்தான். 25-ஆம் தேதி தீர்ப்பு. 24-ஆம் தேதி சாயங்காலமே ஒச்சண்டி. நேனு குஸ்தாமு. மஞ்சி சந்தோஷமண்டி" தொடர்பைத் துண்டித்தாள்.

"சொல்லு சதீஷ் என்ன வேணும்?"

"பாகப்பிரிவினை." ஒற்றை வார்த்தையைத் துப்பினான்.

"ரொம்பப் பழைய படம், ஆனால் நல்ல படம். நானும் உங்கம்மாவும் இரண்டு தரம் பார்த்திருக்கோம்..." சுகந்தியின் அல்ப ஜோக்கை சதீஷ் ரசிக்கவில்லை.

"ஆன்ட்டி நான் உங்களிடம் தமாஷ் பண்ண வரலை" - சதீஷ் முகம் சிவந்திருந்தான்.

சுகந்திக்கு இந்தக் கோபம் புதிது. சதீஷ் சாதாரணமாக மிகவும் அன்பான அமைதியான பையன். இன்று கோபமாக அவன் முன் அமர்ந்திருப்பது முற்றிலும் புதிது. 'இவன் கோபத்திற்கு மிக வலுவான காரணம் இருக்கும்' என்றெண்ணியபடி சுகந்தி அவனை ஏறிட்டாள். எப்போதும் மையிட்டது போன்ற கறுத்த நீண்ட கண்கள், இருபத்தியிரண்டு வயதில் மீசையிருந்தும் இலேசான பெண்மை இழையோடும் முகம். கமலாவின் கணவர் சம்பத் இருபது வயதில் இப்படித்தான் இருந்திருக்க வேண்டும்.

சுகந்தியும் கமலாவும் சிறு வயதிலிருந்தே நெருங்கிய தோழிகள். ஒன்றாகவே பள்ளிக்கூடம் போய், ஒன்றாகப் படித்து, விளையாடி... இப்படியிருந்தவர்கள் பள்ளி யிறுதியில் பிரிய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. சுகந்தியின் அப்பா காலேஜ் அட்மிஷனுக்கு அலைந்த போது கமலாவின் அப்பா அவளுக்குக் கல்யாணம் பண்ண அலைந்தார். விஷயம் தெரிந்து சுகந்தி அலறியடித்துக் கொண்டு கமலாவின் வீட்டிற்கு ஓடினாள்.

"என்ன கமலா உனக்குக் கல்யாணமாமே, நிஜமா? நீ என்னை விட நல்ல ஸ்டூடண்ட். படிப்பை நிறுத்திடப் போறியா? மேலே படிக்க வேண்டாம்?" சுகந்தியின் கேள்விகளுக்குக் கமலாவிடமிருந்து பதிலில்லை.

"ஆசையிருந்தா அவங்களே மேல படிக்க வைச்சுக்குவாங்க. நல்ல இடம் அமையணுமே..." கமலாவின் அம்மா பதில் சொன்னாள். கமலா மௌனமாக நிலம் பார்க்க, சுகந்திக்கு வலித்தது.

இரண்டு பேரும் வெவ்வேறு வாழ்க்கையை மேற்கொண்டாலும் நட்பு தொடர்ந்து, வலுவானது. சுகந்தி எம்.ஏ., முடித்த போது கமலா இரண்டு குழந்தைகளுக்குத் தாயாகியிருந்தாள். சட்டப் படிப்புக்காக ஊரை விட்டுப் போக வேண்டிய நிர்ப்பந்தம். கமலாவிடம் சொன்ன போது கண்களில் கண்ணீர்.

"சீ! என்ன இது பைத்தியமாட்டம். மூன்றே வருஷம். போறது தெரியாமல் ஓடிடும். உனக்குக் குழந்தைகள், வீடு, கணவன்னு சரியாப் போயிடும். நானும் படிப்பில மூழ்கிடுவேன். இதுக்கு ஏன் அழறே?"

"சுகந்தி! நானும் கல்யாணத்திற்குச் சம்மதிக்காமல் படித்திருக்கலாமோ? அப்பா கிட்டே பிடிவாதம் பிடிச்சு ஒத்திப் போட்டிருக்கலாமோன்னு இப்ப தோணுது..."

"என்ன இத்தனை வருஷத்திற்கு அப்புறம் திடீர்னு?"

"இல்லை சுகந்தி; இது சில வருஷங்களாகவே மனசில இருக்கு. கல்யாணம்னு

சொன்னதும் எனக்குச் சந்தோஷமாத்தான் இருந்தது. ஆனால் நாளாக, நாளாக, என் வாழ்க்கையே வேஸ்ட்டா போயிட்டா மாதிரி இருக்கு. என் கணவருக்கு எல்லாம் செய்து நல்ல பெண்டாட்டின்னு பேர் வாங்கிட்டேன். குழந்தைகளையும் நல்லா பார்த்துக்கறேன். ஆனா, எனக்காக நான் எதுவுமே செஞ்சுக்க லையே? நானா, தனியா, இது என்னுடைய தேவைன்னு சொல்லி பூர்த்தி செஞ்சுக்க லையே..."

சுகந்தி மெலிதாக அதிர்ந்தாள்: "கமலா நீ பேச றது எனக்குப் புரியலை..."

"உனக்குப் புரியாது சுகந்தி. ஏன்னா நீயும் எல்லாரையும் போல இந்த வாழ்க்கையை நான் விரும்பி ஏற்றுக் கொண்டதா நினைக்கிறே. ஆனா எனக்கு அப்படியில்லை. எங்கப்பா இவன்தான் உன் புருஷன் அப்படின்னு கொண்டு வந்து நிறுத்தி னார்; கழுத்தை நீட்டினேன். எங்கம்மா இவைதான் உன் புடைவைகள், நகைகள்னு கொண்டு வந்து கொடுக்க நான் உடுத்திக் கொண்டேன். என் கண வர், இதுதான் நம் வீடு, குழந்தைகள்னு கொடுத்தார். ஏற்றுக் கொண்டு வாழத் தொடங்கினேன். இந்த ஓட்டத்தில் நான் எங்கே இருக்கேன் சுகந்தி? சொல்லு பார்ப்போம்...."

ஜானகி விஸ்வநாதன்

சுகந்தியால் பதில் பேச முடிய வில்லை. கமலாவுக்குள் இன் னொரு கமலா ஒளிந்திருப்பது இவ்வளவு நெருக்கமான தோழிக்கே புரியாமல் போனது பெரிய சோகம்தான்.

சற்று நேரம் இருவருமே பேசிக் கொள்ளவில்லை. மீண் டும் கமலா ஆரம்பித்தாள், "நீலச் சட்டை போட்டுக் கோன்னு நான் சொன்னா, சிவப்புச் சட்டைதான் வேணும்னு என் பிள்ளை அடம்பிடிக்கிறான். பருப்பு சாதம் பிசைந்தால், தயிர் சாதம்தான் வேண்டுமென்று என் பெண் பிடிவாதம் செய் யறா. எனக்கு மட்டும் ஏன் சுகந்தி பிடிவாதமே செய் யத் தெரியவில்லை? எல் லோரும் அவரவர் தேவை களைக் கண்டிப்பும் கறாரு மாய்ப் பூர்த்தி செய்து கொள்ள, நான் மட்டும் ஏன் எல்லாவற்றையும் நழுவ விட்டேன்?" - குரல் உடைந்து கமலா விசிக்க ஆரம்பித்தாள். குழந்தை கள் மிரண்டு போய் அவளைப் பார்த்தன. சுகந்தி மௌனமாய் உட்கார்ந்திருந்தாள்.

அரை மணிக்குப் பிறகு, எழுந்து போய் முகம் அலம்பி, பொட் டிட்டு 'பளிச்'சென்று எதிரில் வந்த கமலா, "பயந்துட்டியா சுகந்தி, நான் சீக்கிரம் சரியா யிடுவேன். மனக குழம்பியிருந்தது. ஏதேதோ உளறிட் டேன். என்னைப் பற்றிக் கவலைப் படாதே. வா டிபன் சாப்பிடலாம்," என் றாள். இதுதான் கமலா. சடுதியில் சரியாகிச் சிரித்து விடும் இந்தக் குழந்



னைதான் கமலா.

இந்தக் குழந்தையையும் ஒரேயடியாய் உலுக்கும்படி அது நடந்தது. கமலாவின் கணவன் எதிர்ச்சாரியில் பாங்குக்கு போய்த் திரும்பி வரும் போது லாரியில் அடிபட்டு வீட்டு வாசலிலேயே பிணமானான். சின்னக் குழந்தைகளுடன் இருபத்தியாறு வயது கமலா சுத்தமாக நொறுங்கி விடுவாள் என்று எதிர்பார்த்ததற்கு மாறாக, தைரியமாக இருந்தாள். கணவன் விட்டுச் சென்ற பிஸினஸை வெற்றிகரமாகத் தொடர்ந்து நடத்தினாள். குழந்தைகளை நன்றாக வளர்த்து ஆளாக்கினாள். மகளுக்குத் திருமணம் முடித்தாள். மகனை பிஸினஸ் வாரிசாக உருவாக்கினாள்.

அந்த அன்பு மகன்தான் இன்று பாகப் பிரிவினை கேட்டு சுகந்தியின் முன்னால். 'இவனுக்கு என்ன ஆயிற்று?' எண்ண ஓட்டத்தை நிறுத்தி எதிரில் இருந்தவனைப் பார்த்து, "சொல்லு சதீஷ் என்ன ப்ராப்ளம்? பதற்றமில்லாமல், கோபமில்லாமல் நிதானமாச் சொல்லு. பாகப்பிரிவினை கேட்கிற அளவுக்கு இப்போ என்ன நடந்து போச்சு?"

"ஒண்ணும் நடக்கலை. நான் மேஜர். என்னுடைய வாழ்க்கையை என்னால நடத்திக்க முடியும். எங்கப்பாவுடைய பிஸினஸில் எனக்கு - வாரிசான எனக்கு - என்ன பங்கு உண்டோ அது வேணும். நான் இனி எங்கம்மாவுடன் இருக்கத் தயாராக இல்லை."

சுகந்தி அதிர்ந்தாள். "சதீஷ் நீ என்ன பேசறே? உங்கப்பாவோட பிஸினஸை வலுப்படுத்தி, உன்னைத் தன்னந்தனியா வளர்த்து ஆளாக்கி, நல்ல வாரிசா உருவாக்கின உங்கம்மாவையா விட்டுப் போகப் போறே? உனக்கு என்ன ஆச்சு சதீஷ்?"

"எனக்கு எதுவும் ஆகலை. எங்கம்மாவுக்குத்தான் என்னமோ ஆயிடுச்சு. அவங்களுக்கு இனிமே நாங்க வேண்டாம். புதுசா ஒரு நண்பன் கிடைச்சிருக்கானே அந்த பாங்க் ஆபீஸர் கோபாலரத்னம் - அவன் போதும்."

சுகந்திக்குப் புரிந்து விட்டது. பிரச்னையின் நாடி கிடைத்து விட்டது.

"அந்த கோபாலரத்னத்தோட வெக்சருக்குப் போறேன், கச்சேரிக்குப் போறேன்னு, ஊர் சுத்தறாங்க. அவங்களுக்கு எங்களைப் பற்றிக் கவலையில்லை..."

கமலா, முன்பே கோபாலரத்னத்தைப் பற்றிச் சொல்லியிருந்தாள். வெகு நாட்களுக்குப் பின் அவளுக்குக் கிடைத்திருக்கும் ஒரு நல்ல தோழன். இது மகனுக்குப் பொறுக்கவில்லை. அன்பு பங்கு போடப்பட்டு விடுமோ என்ற பயத்தில் சொத்தில் பங்கு கேட்கிறான்.

"இதே நட்பு நாளைக்குத் தீவிரமடைந்து அவங்க கல்யாணம் பண்ணிக்கத் தீர்மானிச்சா என் வாழ்க்கை என்ன ஆறது, ஆன்ட்டி?"

சுகந்தி உஷ்ணமானாள். "கொஞ்சம் அமைதியாயிரு. உன்னோட கோபவேகத்துல, ஒரு நல்ல நட்பைக் கொச்சைப்படுத்தாதே. வார்த்தைகளை வாரியிறைக்காமல் எழுந்து போ. நான் உங்கம்மாகிட்ட பேசறேன். நீ அப்புறமா என்னை வந்து பாரு."

சதீஷ் கோபமாக எழுந்து போனான். சுகந்தி அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஏனோ தெரியவில்லை, பல வருஷங்களுக்கு முன், "எனக்காக நான் எதுவுமே செஞ்சுக்கலையே! நானா, தனியா, இது என்னுடைய தேவைன்னு சொல்லி பூர்த்தி செஞ்சுக்கலையே..." என்று விசித்த கமலா, சுகந்தியின் கண்முன் வந்தாள்.

---



"'ஆர். ஸி. புக்ல என்னப்பா ஒண்ணுமே காணோம்?"

"எல்லா விவரமும் இருக்கே சார்....?"

"அதெல்லாம் யாருக்குய்யா வேணும்... மாமூல் வைச்சுத் தரல்லையேன்னு கேட்டேன்!"

— சீர்காழி. வி. ரேவதி

"என்னைக் கண்டதும் 'கும்பிட போன தெய்வம், குறுக்கே வந்த மாதிரி'ன்னு சொல்றீங்களே எதுக்கு சார்?"

"அவசரமா கொஞ்சம் பணம் தேவைப்படுது பக்கிரி.... ஒரு நூறு ரூபாய் 'மாமூல் அட்வான்ஸ்' குடுத்தீன்னா அடுத்த மாமூல்ல கழிச்சுக்கலாம்!"

— இரா. சம்பத்குமார்



# உங்கள் மகிழ்ச்சியைப் பகிர்ந்து

ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு தேவை. ஆனால் அனைவரையுமே பொதுவாகப் பாதிப்பது விலைவாசி உயர்வு. நம்மால் சமாளிக்க முடியுமா என்கிற பிரமிப்பை அது ஏற்படுத்துகிறது. ஆனால், 8,00,000 பேர் ஸ்ரீராம் துணையுடன் அதனை வென்றிருக்கிறார்கள். 1975 -ல் நிலவிய அதே பண மதிப்பில் இன்று 1995 -லும் நிதியுதவி பெறும் வாய்ப்பை அளிக்கும் நிறுவனம் ஸ்ரீராம். ஆகவே, ஸ்ரீராமில் சந்தாதாரர் ஆகச்சேருங்கள். இன்றைய நிம்மதி, நாளைய பாதுகாப்பு ஆகியவற்றோடு பல பரிசுகளையும் வென்றிடுங்கள்.

## ஸ்ரீராம் சித்திரத் திருவிழா

ஏப்ரல் 5-14, 1995

### சந்தாதாரர் பரிசுகள்

| சீட்டின் மதிப்பு* ரு. | சந்தாதாரருக்குக் கிடைக்கும் பரிசு |
|---|---|
| 1. 250 x 40 = 10,000 | 3 கிராம் வெள்ளிக்காசு |
| 2. 500 x 30 = 15,000 | S.S. டீ போல், மூடியுடன் |
| 3. 625 x 40 = 25,000 | காளி S.S.பெரிய அளவு சாப்பாட்டுத் தட்டு |
| 4. 500 x 60 = 30,000 | H.M.A.C. ப்ரைபான் |
| 5. 1,000 x 50 = 50,000 | S.S. ஜோதுவாரி குண்டு |
| 6. 1,250 x 60 = 75,000 | S.S.C.B. டப் -4 கொண்ட செட் |
| 7. 2,500 x 40 = 1,00,000 | S.S.C.B. ப்ரை பான், மூடியுடன் |
| 8. 5,000 x 30 = 1,50,000 | S.S.C.B. சாஸ் பான் |
| 9. 4,000 x 50 = 2,00,000 | காளி C.B. ப்ரெஷர் பான், மூடியில்லாதது |
| 10. 5,000 x 60 = 3,00,000 | 2 கிராம் தங்கக் காசு |
| 11. 10,000 x 50 = 5,00,000 | 4 கிராம் தங்கக் காசு |

* நுழைவுக் கட்டணம் தனி




முன் அங்கீகாரம் பெறப்பட்டது

# கொள்ளும் தருணம் இதோ!

ரூ. 75,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுப்பவர்களுக்கு, பொதுத்துறை அல்லது தனியார்துறை அல்லது அரசுப்பணி அல்லது அங்கீகாரம் பெற்றுள்ள நிறுவனங்கள் ஆகியவற்றில் பணிபுரியும் மூன்று பேர் உத்தரவாதம் அளித்தால் போதுமானது.

வேலையில் இருக்கும் பெண்மணி ரூ. 15,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுக்கும்போது அவருடைய கணவரின் உத்தரவாதமே போதுமானது.

- அறிமுகப் படுத்துவோர் பரிசுகள்





## மகிழ்ச்சிக்கு வழி திறக்கும் மர்மத்திறவுகோல்

**SECRET KEY GIFT SURPRISES COUPON** SPECIMEN

NAME: ..........

CHIT REF: .......... CODE NO: ..........

BRANCH: ..........

**PLEASE SEE THE REVERSE FOR DETAILS.**

ஒரு மர்மத் திறவுகோல் எண்ணற்ற பரிசுகளுக்கு வழிவகுத்து உங்களை மகிழ்வடையச் செய்யக் காத்திருக்கிறது. இப்போதைய ஸ்ரீராம் சிட்ஸ் சந்தாதாரர்களுக்கு ஓர் அஞ்சல் அனுப்பப் படுகிறது. அந்த அஞ்சலில் மர்மத் திறவுகோலின் மாதிரிக் கூப்பன் இணைந்திருக்கிறது. ஸ்ரீராம் சிட்ஸ் சந்தாதாரர் அறிமுகப்படுத்தும் நபர் புதிய சிட்டு சந்தாதாரராகச் சேர்ந்த உடன் மாதிரிக் கூப்பனை அறிந்து ஒரு பிளாஸ்டிக் பௌச்சைப் பெறுகிறார். அதனைக் கத்தரித்து திறந்து உடன் ஒரு ரகசிய எண் வெளிப்படும். அந்த ரகசிய எண்ணுக்குப் பொருந்தும் பரிசை அவர் உடனே பெறலாம். அறிமுகப்படுத்துவோர் பரிசு இப்போதுள்ள சந்தாதாரர்களுக்கு மட்டுமே.

மர்மத் திறவுகோல் எண்ணற்ற பரிசுகள் - வாஷிங் மெஷின் முதல் ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் தட்டுகள் வரை.




ALL INDIA DEPOSIT MOBILISATION DRIVE IS ON.

**ஸ்ரீராம்** சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.

**ஸ்ரீராம்** சிட்ஸ் தமிழ்நாடு பி. லிமிடெட்.

நிர்வாக அலுவலகம்: ''சுப்பிரமணியம் பில்டிங்'', 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன்: 8520700|8523932|8522651|8525536|8520797

ஸ்ரீராம் சிட்ஸ் - பலருக்கும் பல வகையிலும் பலன்.



ADWAVE/SCI/5000 TAM D



## சென்ற வாரம் :

நாச்சியப்ப செட்டியார் பகவதியை இரண்டாந்தாரமாய் மணந்து, மலை மேல் தமது ஏலக்காய்த் தோட்டத்துக்கு அழைத்து வருகிறார். மதுரையில் அவர் முதல் மனைவி. பகவதியிடம் மனித நேயம் காட்டுகிறாள். பகவதிக்கு மலை வாழ்க்கை புரிந்தும் புரியாமலிருக்கையில் நாச்சியப்ப செட்டியார் மரணமடைகிறார்.

இலை இலையாய், அங்குலம் அங்குலமாய் ஒரு செடி வளர்வதைப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, மண் சட்டென்று நெக்கு விட்டுச் சரிய, செடி எங்கோ அதல பாதாளத்தில் தலை குப்புறக் கிடப்



பதைப் பார்ப்பதான ஒரு உணர்வை அந்த மரணம் அவளுக்கு ஏற்படுத்தியது. அவ்வளவுதான்....! அந்தச் செடியின் வாழ்க்கை அவ்வளவுதான்! ஏன் அங்கே மட்டும் மண் சரிந்தது? ஏன் அந்தச் செடி மட்டும் இறந்தது? என்ற கேள்விக்குப் பதிலே இல்லை. உலகத்தில் தோன்றியவைகளெல்லாம் அழியும் என்ற நியதி இருந்தாலும் எப்போதும் அழிவையே ஞாபகம் வைத்துக் கொள்ள முடிவதில்லை. ஒரு செடி வேர் பிடித்துத் தளிர் விடும் போது, ஒரு மரம் முதன் முதலாய்க் கனி தரும் போது அந்த உயிர் எப்போது பட்டுப் போகும் என்று யோசிக்கத் தோன்றுவதில்லை. வளர வளர நிரந்தரம் போலும் ஒரு நினைப்பு வந்து விடுகிறது.

பிள்ளைக்குக் கல்யாணமாகி விட்டால் நான் மலையோடு வந்து விடுவேன் என்று நாச்சியப்பன் சொல்லுவது வழக்கம்.

## 2

# என்னுயிரும் நீயல்லவோ

அப்படிப் போய் விடட்டுமா என்று பெண்டாட்டி ஆச்சியைக் கேட்ட போது "நல்லா போய் இருங்க" என்று ஆச்சி சொல்லி விட்டாளாம்.

"எப்படா ஒழிவான்னு காத்துக்கிட்டிருக்கியோ?"

நாச்சியப்ப செட்டியார் கொஞ்சலைக் கோபமாக மாற்றிய போது ஆச்சி லேசாய்ச் சிரித்தாளாம்.

"இல்லை, இல்லை எப்பவும் நான் உங்க பின்னாடி நிழலா இருக்கணும்னு சொல்லுவேன்னு நினைச்சியனோ, அப்படி நடிக்கணும்னா செய்திரலாம். ரொம்ப சுலபம். ஆனா நிஜம் வேற."

"எது நிஜம்?"

"பதினாறு வயசில வாழ்க்கைப்பட்டு நாற்பத்தாறு வயசுக்கு நிக்கேன். ரெண்டு பதினாறு வருஷத்துக்கு மேலே குடித்தனம் பண்ணியாச்சு. கைகால்ல வலு இருக்கச்சேயே கோவில் கோவிலா சுத்தி வர வேண்டாமா? வடக்க ரிஷிகேஷம் வரை சுத்தி வர

**பாலகுமாரன்**

வேண்டாமா?"

"ஏன் ரிஷிகேஷத்துக்கு நாங்க வர மாட்டமா? எங்களுக்கு ஆகாத இடமா?"

"பொட்டச்சிகளோட சுத்தற ஆளுக்கு ரிஷிகேசம் என்ன! மலை மேல ஆறு மாசம் அனுபவிக்க ஒரு சின்ன பொண்ண வச்சுக்கிட்டு ரிஷிகேஷம் போனா உமக்கு ஆவுமா? நீங்க உங்க ஜோலிய பாருங்க. நாங்க எங்க ஜோலிய பார்க்கறோம்."

தன் வயது ஒத்த நகரத்தார் நண்பர்களை ஒன்று சேர்த்து, இதற்கு முன் யாத்திரை போனவர்களைத் துணையாக்கிக் கொண்டு ஆச்சி வடகுல யாத்திரை கிளம்பி விட்டாள். கிளம்புகிற நேரம் நாச்சியப்ப செட்டியாருக்கு மிரட்சியாக இருந்தது. தன்னை விட தன் மனைவி எல்லா வகையிலும் உசத்தியோ என்கிற பயம் வந்தது. விடியற்காலையில் புருஷனும் மனைவியும் பூஜை அறையில் கண் மூடி உட்கார்ந்திருக்கிற போது நாச்சியப்ப செட்டியாருக்கு அழுகை வந்தது.

"அட என்ன கூத்து இது. நான் என்ன திரும்பி வராதையா போகப் போறேன். கண்ணைத் துடைங்க முதல்ல."

"எம் மேல கோபிச்சுக்கிட்டுப் போறியோன்னு ஒரு சந்தேகம்."

"உங்க மேல எனக்கு எதுக்கு கோபம். ரிஷிகேஷம் போகணும்னு ரொம்ப நான் ஆசையாச்சே."

"அதில்ல... பொட்டச்சி ருசி! நம்மளால முடியாது. மலைக்குப் போயிருங்க அப்படீன்னு ஏசின மாதிரிப் பேசிட்ட. அதுதான் ஒரு வலி."

"அட சொல்லு பொறுக்காத சீமானே, இது ஏலக்காய் சீசன் இல்லையா. யாத்திரை போறோம்னு அந்தப் பொண்ணுட்ட சொல்லிட்டு வந்திரா? அவசியத்துக்குன்னு கட்டிக்கிட்டு வந்திரு. மலைல குடித்தனம் போட்டுரு. அதை அலங்கோலமா நடத்தினா நல்லாருக்குமா. அந்தப் பொண்ணு மனசு வேதனைப்படாதா. அதும் தவிர, நான் இல்லாத ஒரு நாலைஞ்சு மாதம் இருந்து பாரும். எனக்கு அப்படி இருக்கணும்னு ஒரு ஆசை வந்திருச்சு. பொண்ணு, புள்ளை, புருஷன், மாப்பிள்ளை எந்தக் கூட்டமுமில்லாம, ஒட்டு உறவில்லாத, தமிழ் பேசற ஆட்களா, தேவாரம் பாடற குழுவா, பிரதோஷமும், சிவராத்திரியும் கொண்டாடிட்டு, சமையலைப் பத்தியோ, சம்பாத்தியத்தைப் பத்தியோ கவலைப்படாத செலவு பண்ணிட்டு வரணும்."

ஆச்சியின் சிவத் தொண்டு மதுரை அறிந்த விஷயம். சமையலான் உட்பட எண்ணிப் பதினான்கு பேர் கிளம்பி, அங்கங்கிருந்து அஞ்சலட்டையில் நலம் எழுதி அனுப்பினாள். எழுதி எட்டு நாள் கழித்து மலைக்கு கார்டு வரும்.

பகவதிக்கு என் ஆசீர்வாதம் என்று தபால் கார்டில் ஒரு வரி இருக்கும். சில சமயம் கவரில் விபூதி, குங்குமப் பிரசாதம் வரும்.

ஆச்சியிடமிருந்து கடிதம் வந்த நாளில் நாச்சியப்ப செட்டியார் பகவதியிடம் அதிகம் பேச மாட்டார். வேலையாட்கள் தவறு செய்தால் சுள்ளென்று கோபம் கொள்வார்.

"உங்களுக்கென்ன போச்சு. வாரம் பொறந்தா கூலி. ஏலக்கா வந்தாலும் வராட்டியும் காசு. நாத்து எடுத்து, செடி நட்டு, நான் தவறாம தண்ணியடிச்சு, உள்ளி புடிக்கற வரைக்கும் நானில்ல கவலையோட உட்கார்ந்துக்கிட்டிருக்க வேண்டியிருக்கு. ஆனை நம்பின தொழிலு ஏலக்காய். என்னைய கவுத்துப் போட்டுட்டு நாசமா போ நீன்னு போயிடலாம். வேற தோட்டத்துக்குப் போய் வேலை பார்த்திடலாம். அப்படிப் போனவன் யாரும் நல்லாருந்ததில்லை. மத்தவங்க நல்லாருக்கணுங்கற எண்ணம் மனுஷாளுக்கு வேணும்டே. அப்படி நல்ல மனசு இருக்கற போதுதான் வாழ்க்கையில நம்பிக்கையும் இருக்கும். நம்பிக்கை இருந்துச்சுன்னா நல்ல குணம் தானா வரும். நம்பிக்கை துரோகம் பண்றவனுக்கு இன்னிக்கி இல்லாட்டியும் நாளைக்கு நச்சுன்னு விழும்."

வேலையாட்களைக் கடிந்து கொள்கிற போது தேவைக்கு அதிகமாகவே நாச்சியப்பனுக்கு வார்த்தைகள் தெறிக்கும். ஆனால் அதேசமயம் அதில் உண்மையும் இல்லாமலில்லை. ஏலக்காய் ஆட்களை நம்பிச் செய்கிற பயிர். ஒற்றை ஆளாய் நிர்வகிக்க முடியாத தோட்டம். பயிர் செய்தோம் பறித்தோம் விற்றோம் என்று முடியாது. பறித்ததற்குப் பிறகுதான் முக்கியமான வேலை துவங்குகிறது. பழுத்து ஈரமாய் இருக்கிற

## நெஞ்சை அள்ளும் தஞ்சை!

**தஞ்சை மாவட்ட வாசகர்களே!**

- உங்களுக்கென ஒதுக்கப்பட்டுள்ள பக்கங்களுக்கு உடனே எழுதுங்கள்!
- இப்போது தஞ்சை மாவட்டத்தில் வசிப்பவர்கள் மட்டுமே எழுதலாம்.
- எழுதும் விஷயங்கள், ஜோக், துணுக்கு, உண்மைச் சம்பவம், புது/மரபுக் கவிதை, மாணவர் நியூஸ் என எதுவாயினும் போஸ்ட் கார்டில் மட்டுமே எழுதலாம்.
- பளிச்சென்று கவர்ந்திழுக்கும் வண்ணமாக உங்கள் படைப்பு அமைய வேண்டும்.
- கல்கி ஆசிரியர் குழுவினர் தேர்ந்தெடுக்கும் தஞ்சை மாவட்டப் படைப்புகள் 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' பகுதி

யில் இடம்பெறும்.

● பிரசுரமாகும் படைப்புகளுக்குச் சன்மானம். தலைசிறந்த படைப்புக்குப் பரிசும் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

● உங்கள் படைப்புகளின் தரத்தைப் பொறுத்து அதிகபட்சமாக நான்கு வாரங்கள் வரை இப்பகுதி தொடர்ந்து வெளியாகும்.

● ஒருவர் எத்தனை படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். போஸ்ட் கார்டு முகவரிப் பகுதியில் **'நெஞ்சை அள்ளும் தஞ்சை'** என்று குறிப்பிடவும்.

**மற்ற மாவட்ட வாசகர்கள் இப்போதே யோசிக்கத் தொடங்கலாமே!**

**— ஆசிரியர்**

ஏலக்காய் உடனே உலரச் செய்ய வேண்டும். உஷ்ணம் காட்டி இறுகச் செய்ய வேண்டும். இல்லையெனில் பழுத்தது அழுகி விடும். உஷ்ணமாக்கி உலரவைக்க தனியான அடுப்பும், தகரப்பாய்களும் வேண்டும். உஷ்ணம் அதிகமானால் ஏலக்காய் கருகி விடும். உஷ்ணம் குறைந்தால் ஏலக்காய் அழுகிவிடும். மேல் தோலில் இருக்கிற பச்சை கெடாமல், உள்ளே இருக்கிற பயிறு கெடாமல் காயை இறுக்கி, தரம் பிரித்து, தூசு தேய்த்து பளபளவென்று கொடுப்பதற்கு இரண்டு மூன்று ஆட்கள் வேண்டும். அந்த இரண்டு மூன்று ஆட்களும் இது தன் தோட்டம், தன் காய் என்பது போல் உழைக்க வேண்டும். அப்படி உழைக்காது போனால் நல்ல அறுவடை செய்த பிறகும் நஷ்டம் ஏற்படும்.

ஆனால் உலகத்தில் நம்பிக்கையானவர்கள் உண்டு. தன் தோட்டம், தன் காய் என்பது போல் நினைக்கிறவர்கள் உண்டு. எஜமான் எங்கிருந்தாலும் விசுவாசமாய் உள்ளவர்கள் உண்டு.

"நாச்சியப்பா! ஆளுங்க மேல நம்பிக்கையில்லாத, பொட்ட புள்ளைய கல்யாணம் கட்டி கூட்டியாந்துட்டியா. அதுக்கு ஏலக்காய் க்யூரிங்கும், விவசாயமும் சுத்துக் கொடுத்துடலாம்னு பார்க்கிறியா. இது ஆம்பளை வேலைடே, பொம்பளப் புள்ளை அடுப்பு உஷ்ணம் தாங்குமா?"

அடுத்த தோட்டத்து ஆள் கேட்டபோது, நாச்சியப்பன் பதில் சொல்லவில்லை.

ஆண் பிள்ளை வேலைதான். ஆனால் பெண் அதிகாரம் செலுத்தத் தெரிந்தால் ஏலக்காய் பழுதில்லாமல் பெட்டிகளில் அடைபட்டு விடும்.

நம்பிக்கையும், நம்பிக்கையின்மையும் ஏலக்காய் வறுப்பதில் மட்டுமல்ல ஒரு ஆணுக்கு இரண்டாவது பெண்டாட்டியாய் இருந்து குடித்தனம் செய்வதிலும் இருக்கிறது. சந்தேகம் வந்தால் மொத்தமும் பாழாகிப் போய்விடும். அரைமணி நேரம் தாமதித்தால் கூட ஏலக்காய் உஷ்ணத்தில் பொரிந்துவிடும். வெளியே போய் அரை நாள் தாமதித்தால் கூட இரண்டாவதாய் வாழ்க்கைப்பட்டவளிடம் ஆயிரம் கேள்விகள் கேட்கப்படும். நாச்சியப்பன் இல்லாமல் வெளியூருக்கு பகவதி போனதே இல்லை. ஆச்சி பயணப்பட்ட ஊர் பெயர்களெல்லாம் படித்தவுடன், அவளுக்கும் போக வேண்டுமென்று தோன்றியது. அதே சமயம் அறுத்துக் கொண்டது போல் ஆச்சி போனது பார்த்து ஆச்சர்யமாக இருந்தது.

"அதெப்படித் தோணும் ஒரு பொம்பளைக்கு. தன் ஜனம் இல்லாத தனியா போகணும்னு?"

"அவளைப் பத்தி தப்பா பேசாதே."

"ஏன் உங்களுக்குப் பிடிக்காதோ?"

"நான் கிடக்கேன் நாய். ஆச்சி ஒரு மாதிரியான பொம்பளை."

"ஒரு மாதிரியின்னா?"

"நல்லாருன்னு சொன்னா நல்லாருந்துடுவோம். வேற ஏதும் தப்பா சொன்னா தப்பா ஆயிடும்."

"பில்லி சூனியமா?"

"அட்சே! கொஞ்சம் சாமி, நேர்மைன்னு நல்லா இருக்கறவங்க. நம்மை மாதிரியில்லை."

"நாம என்ன நேர்மை கெட்டுப் போயிட்டோம்? நமக்கு எந்த சாமி குறைச்சலாச்சு?"

அவள் கேட்க, நாச்சியப்பனிடமிருந்து பதில் எதுவும் வரவில்லை.

ஆச்சி ரிஷிகேஷத்திலிருந்து விபூதியும், சிவானந்தர் படமும், கடவுள் வழிபாடு பற்றி மூன்று புத்தகங்களும் ஒரு மாத சஞ்சிகைக்குக் காசும் கட்டி, நாச்சியப்ப செட்டியார் பெயரில் அனுப்பியிருந்தாள்.

அந்த சிவானந்தர் படத்தை பகவதி சட்டம் போட்டுப் பூஜை அறையில் வைத்தாள். உலகமெல்லாம் சுற்றி, இமய மலையில் ஒடுங்கிய அந்த மகானின் சரித்திரம் படித்தாள். அவர் கொடுத்த குறிப்புகள் பிரகாரம் பூஜை செய்யத் துவங்கினாள்.

"நீங்க உலகமெல்லாம் சுத்தி இமயமலைல அமைதியாயிட்டீங்க. நான் இங்கிட்டு அங்கிட்டு நகர முடியாத ஜாதி. வாழ்க்கைப்பட்ட பொம்பளை மாதிரி வெளில தோணினாலும் தூக்கிக் கொண்டாந்த பொம்பளை. சொடுக்கினா சரிங்கணும். எத்தினி சொன்னாலும் தாங்கணும். மூத்தவங்க நல்லவங்கங்கறதனால மணக்குது. அவங்க ஐயாவுக்கு அனுப்



''உங்க 'ஓய்ப்' இவ்வளவு சாரி பைத்தியமா இருப்பாங்கன்னு நம்பவே இல்லை.''

''ஏன்? என்ன விஷயம்?''

''எறும்பு சாரி, சாரியாய்ப் போகுது அப்படின்னு சொன்னா, 'பார்டர் என்ன? ஒரு பக்கமா, ரெண்டு பக்கமும் உண்டா'ன்னு கேட்கிறாங்க!''

- அகவினி ஐயப்பன்



பிச்ச போட்டோல எனக்கு அனுப்பினதா நினைக்கறேன். இந்த புஸ்தகத்துல இருக்கற தெல்லாம் எனக்குப் புரியணும். செட்டியாருக்கு மூத்தார்கிட்ட ஒரு பயம் கலந்த பிரியம் இருக்கே அது எங்கிட்டேயும் இருக்கணும்.

''பொம்பளைக்கு ஆம்பளை வெறும் பிரியம் காட்டினா போறாது. கொஞ்சம் பயமும் காட்டணும். பொம்பளை கோவிச்சுக்கு வாளோன்னு ஆம்பளைக்கு ஒரு அச்சம் வேணும். பயம் கலந்த பிரியம் வேணும். காலும் கையும் கரணை கரணையா இருந்தா பிரியம் வந்திரலாம். பயம் வந்துருமா? ஆச்சி சொன்னா பலிக்கும்னு பயப்படறாரே செட்டியாரு. நான் சொன்னா பலிக்காதா?

"என் அப்பா, ஆயிக்கு வக்கில்ல, அண்ணன் தம்பிக்கு பிடிப்பில்லை. அடுத்த வீடுன்னோ, பின் பக்கத் தெருவுன்னோ, லேடீஸ் க்ளப்ன்னோ எதுவுமில்லை. இத கத்துக்கன்னு எங்கிட்ட யாரும் எதுவும் சொன்னதில்லை. ஏலக்காய் தவிர செட்டியார் வேற எதுவும் கத்துத் தரலை.

"ஐயா, ரிஷிகேஷத்து ஐயா! எனக்கு நல்ல விஷயங்கள் நீங்க சொல்லித் தரணும். மனுஷாளாகப்பட்டவங்க எது அவசியம் கத்துக்கணுமோ அத நான் கத்துக்கறதுக்கு நீங்க உதவி செய்யணும்.''

ஆச்சி அவளுக்குப் பெரிய கங்கை சொம்பும், ஒற்றைக் கல்லில் செதுக்கிய ஆறங்குல சிவலிங்கமும், அன்னபூரணி சிலையும் அனுப்பியிருந்தாள். கடவுள் உருவங்கள் வர வர, பூஜை பெருகியது. பூஜை பெருகப் பெருக கடவுள் உருவங்களும் வரத் துவங்கின.

புருஷனோடு வாழும்படியாகவும் நேரிடுகிறது. பலவித பூஜைகளும் செய்து கொண்டிருக்கிறேன். புருஷனோடு வாழுவதால் பூஜை செய்யக் கூடாது என்று உண்டா? - ஒரு மடாதிபதிக்கு எழுதிக் கேட்டதும் மறுவாரமே பதில் வந்தது.

உங்கள் கடமையைப் பூரணமாகச் செய்வதே பெரிய பூஜை. இந்துப் பெண்மணிக்கு புருஷனே முழு முதற் தெய்வம். என்று பதில் வந்தது. கூடவே துளசி பூஜை செய்வது எப்படி என்றும் ஒரு புத்தகம் அனுப்பியிருந்தது. நாச்சியப்பனுக்கு நல்ல துணையாக இருப்பதோடு, துளசி பூஜையும் பகவதி செய்யத் துவங்கினாள்.

நாச்சியப்பன் இறுக்கித் திணறடிக்கும் போது தன்னைச் சுற்றியுள்ள தெய்வ உருவங்களையெல்லாம் பகவதி வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பாள். "நான் செய்யறது தப்புன்னா மன்னிச்சுக்கோங்க" என்று கெஞ்சுவாள். நாச்சியப்பன் அயர்ந்து தூங்குகிற போது கை, கால் அலம்பி முகம் கழுவிப் பொட்டு வைத்துக் கொண்டு நாச்சியப்பனை எழுப்பாதவண்ணம் முணுமுணுப்பாய் சுந்தரகாண்டம் படிப்பாள்.

இருபது நாட்களுக்கு முன்பு நாச்சியப்பன் மதுரை போன போது இரண்டு லட்சத்துப் பன்னிரண்டாயிரம் ராமஜெயம் நோட்டுப் புத்தகத்தைக் காசிக்கு அனுப்பச் சொன்னாள்.

"இந்த மூட்டையெல்லாம் நீயே அனுப்பப்படாதா. நான் ஏத்தி இறக்கி அலையணுமாக்கும்."

நாச்சியப்பன் அலுப்பாகப் பேசி டிக்கியில் தொப்பென்று அந்த மூட்டையைப் போட்டுக் கொண்டான். மூட்டை காசிக்குப் போய் விட்டதா என்று தெரிவதற்குள் நாச்சியப்பன் மரணச் செய்தி வந்து விட்டது. மதுரைக்குப் புறப்படத் தயாரான போது இன்னொரு தந்தி வந்தது.

ஆச்சி கவலைக்கிடம். விரைவாய் வரவும் என்ற செய்தியிருந்தது. பச்சையாய்ப் பறித்த ஏலக்காய் பாதி கருங்கி இறுகுவது போல பகவதி யோசிப்பு உஷ்ணத்தில் கருங்கி, இறுகிப் போனாள்.

"ரிஷிகேஷத்து ஐயா, நான் அழக் கூடாது. என் நிலையில் உள்ள பெண் அழுதால் யாருக்கும் பிடிக்காது. நான் சிரித்து விடவும் கூடாது. அதிகம் பேசக் கூடாது. பேசாதிருக்கவும் கூடாது. ரிஷிகேஷத்து ஐயா, இத்தோடு புருஷன் போதுமென்று ஆச்சி ஒரு காலத்தில் நின்றாள். எனக்கும் அந்த நிலைமை வந்து விட்டது. எனக்கும் இத்தோடு புருஷன் போதும். ஆனால் யார் துணையும் இல்லாமல் நான் வாழ முடியுமா. இனி செட்டியார் இல்லை என்று தெரிந்தால் எனக்கு ஏதாவது மதிப்பு இருக்குமா. இந்த நிலம் யாருடையது. என்னுடையதா, செட்டியாருடையதா, இல்லை இன்னும் வேறு யாருடையதாவதா?"

வழி முழுவதும் பகவதி கேட்டுக் கொண்டே போனாள். மதுரையை அடைந்ததும் அவளுக்கு விடை கிடைத்தது.

(தொடரும்)

# பாதுகாக்கப்பட்ட பிக்சட் டெபாசிட்ஸ்

கம்பெனியின் சொத்தின் மீது டெபாசிட்தாரர்களுக்கு தொடர் உரிமை உண்டு. அசல் ரீபண்டிற்கும், முழுக்காலத்திற்கான மாதவட்டிக்கும் டெபாசிட் செய்யும் தேதியன்றே செக் வழங்குகிறோம்.

## பெஸ்ட் பெனிபிட் அண்ட் கேரண்டி பண்ட் டிரஸ்ட்

Regd.

3 வது மாடி,
சாந்தி காம்ப்ளெக்ஸ்,
26, ரங்கநாதன் தெரு,
தி. நகர்,
சென்னை - 600 017.

☎ ஆபீஸ் : 4348560
வீடு : 4347025

# 36%

KAS INDIA

## வட்டி மாதம் மாதம் வழங்கப்படுகிறது.

Prof. V. Vivekanand, Ex-IAS,
Managing Director,

Dr. Parameswari, MBBS.
Chairman.

# நம் புழுக்காத சட்டசபை!

**மா**நில சட்டசபைகள் எல்லாம் கூச்சலும் குழப்பமுமாகவும், சண்டைக் களமாகவும் இருக்கின்றன. காரணம், கொள்கைகள் பற்றிய விவாதங்கள்தாம். இதை எல்லாம் தவிர்த்து விட்டு, இந்தக் கோடைக் காலத்தில் வெயில் பற்றி, வியர்வை பற்றி, விவாதித்தால் எந்த ரகளையும் இருக்காது அல்லவா?

**ஆளும்கட்சி உறுப்பினர்** : சென்ற ஆண்டை விட இந்த ஆண்டு வெயிலின் கடுமை குறைந்திருக்கிறது. அதற்காக நாம் முதலமைச்சரைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

**சபாநாயகர்** : இதற்காக அவருக்கு இன்னொரு டாக்டர் பட்டமே கொடுக்கலாம். எந்தப் பல்கலைக் கழகம் கொடுத்து வைத்திருக்கிறதோ!

**எதிர்க்கட்சித் தலைவர்** : காங்கிரஸ் ஆட்சியின் போது வெயில் இவ்வளவு கடுமையாக இருக்கவில்லை. அதனால்தான் நேரு கட கழுத்து வரை பட்டன் வைத்த கோட்டு அணிந்து கொண்டிருந்தார்.

**இன்னோர் உறுப்பினர்** : ஆனால் காந்திஜி வெற்று உடம்புடன்தான் இருந்தார். அப்போது வெயில் கடுமையாகவேதான் இருந்திருக்க வேண்டும். அவருக்கு ரொம்பவும் வேர்த்துக் கொட்டியிருக்க வேண்டும்.

**முதலமைச்சர்** : மறைந்து போன தலைவர்கள் பெயரை இழுப்பது கூடாது. மறையாத தலைவர்களை எப்படி வேண்டுமானாலும் இழு இழு என்று இழுக்கலாம். குறிப்பாக, சிலர் வெயில் காலத்தில் போராட்டம் என்று ஆரம்பித்து விட்டு, மருத்துவமனையில் போய்ப் படுத்துக் கொண்டு விடுகிறார்கள். அங்கே ஏர்கண்டிஷன் வசதி இருக்கிறது. வியர்க்கவே வியர்க்காது. அதனால், இயற்கைக்கு மாறாக இவர்கள் நடந்து கொண்டு, வியர்வையை அடக்கப் பார்ப்பது எந்த வகையிலும் நியாயமே அல்ல. மருத்துவமனைகளில் இனி ஏர் கண்டிஷன் வசதியே கூடாது என்று சட்டம் கொண்டு வரலாமா என யோசித்து வருகிறோம்.




**எ.க. தலைவர்** : உங்கள் அடக்குமுறையால் போராட்டத்தை அடக்க முடியாவிட்டாலும் வியர்வையையாவது அடக்குவீர்கள் என்று பார்த்தால் அதுவும் கூடாது என்கிறீர்கள்!

**கற்பனைக் கனியான ஓர் உறுப்பினர்** : போராட்டக் காலங்களில், கண்ணீர்ப் புகை மாதிரி, வியர்வைப் புகை உபயோகிக்கலாம். வியர்வை கொட்டக் கொட்ட யாரும் வெயில் காலத்தில் போராட மாட்டார்கள்.

**முதலமைச்சர்** : உறுப்பினரின் யோசனை நன்றாக இருக்கிறது. அமெரிக்காவில் இப்படி வியர்வைப் புகை உபயோகிக்கிறார்களா

என்று விசாரித்து வர, நூற்றி ஐம்பத்தேழு பேரே கொண்ட ஆளுங்கட்சிக் குழு ஒன்றை விரைவிலேயே அங்கு அனுப்பி வைக்கலாம். மாண்புமிகு மூத்த அமைச்சர் யாரேனும் கூடப் போக விரும்பினால், விமானத்தில் ஓரமாகத் தொத்திக் கொண்டு பயணம் செய்யலாம்.

**சபாநாயகர்** : ஆகா, முதல்வரின் கருணையே கருணை! பெருந்தன்மையின் பிரதிபலிப்பு என்பது இதுதான். அவர் காலில் விழலாம் போலிருக்கிறது!

**எ.க. தலைவர்** : ஆளுங்கட்சி உறுப்பினர்களுக்கு மட்டும்தான் வியர்க்குமா? எதிர்க்கட்சி உறுப்பினர்களுக்கு வியர்க்காதா? அவர்களையும் குழுவில் சேர்க்கலாமே?

**முதலமைச்சர்** : சேர்க்கலாம்தான். ஆனால் அவர்கள் பிளேனில் ஏற வரும் போது, கதவை




மூடி விட நேரும்; தப்பித் தவறி யாராவது ஏறி விட்டால் அவர்களை இறக்கி விடவும் நேரலாம். இதற்குச் சம்மதமானால் மரியாதைக்குரிய எதிர்க்கட்சி உறுப்பினர்களையும் குழுவில் சேர்க்க ஆட்சேபணை இல்லை.

**வ.கம். உறுப்பினர்** : வெயில் காலத்தில் வியர்ப்பதும், குளிர்காலத்தில் குளிருவதும் இயற்கை. அதனால், இதற்காக எல்லாம் அமெரிக்கா போய் ஆராய்ச்சி செய்வது அனாவசியம். வேண்டுமானால் மாஸ்கோவுக்கு மட்டும் போய் விசாரித்து விட்டு வரலாம்.

**இ.கம். உறுப்பினர்** : மாஸ்கோவில் எல்லாம் பனிமழைதான். எல்லாருமே உருகிப் போய் விட்டார்கள் - கோர்பசேவ் உட்பட. அதனால் பீஜிங் போய் விசாரித்து வரலாம்.

**எ.க. தலைவர்** : வியர்வையைப் போக்க விசிறி ஒன்றுதான் வழி. அதனால் அடுத்த பட்ஜெட்டில் விசிறிகளுக்கெல்லாம் வரி குறைப்பது பற்றி யோசிக்க வேண்டுகிறேன். குறிப்பாக மின்விசிறிகளுக்கு.

**நிதி அமைச்சர்** : இப்போதைக்கு சினிமா விசிறிகளுக்கு மட்டுமே வரி குறைக்கலாம். மற்ற விசிறிகளுக்குக் குறைப்பது பற்றி விசிறி தயாரிப்பாளர்கள் கவனிப்புடன் வந்து சந்தித்தால் கவனிக்கப்படும்.

**எ.க. தலைவர்** : பூங்காக்கள் எல்லாம் நிறைய இருக்கின்றன. புல் முளைக்க வைத்து, நன்றாகப் பராமரித்தால் மக்கள் கோடைக் காலத்தில் அங்கு போய் உட்காரலாம். வியர்க்காது.

**முதலமைச்சர்** : அவை எல்லாம் நகராட்சியால் பராமரிக்கப்படுகின்றன. அதனால் அரசு இதில் தலையிடாது. ஆனால், என் வருகிற பிறந்த நாளின் போது எல்லாப் பூங்காக்களுக்கும் என் பெயரைச் சூட்டி எனது ஆளுயர கட்அவுட் வைத்தாலே போதும். மக்கள் மனம் குளிர்ந்து விடும்.

**சபாநாயகர்** : ஆகா! முதல்வரின் யோசனை அருமையாக இருக்கிறது. உலகிலேயே இம் மாதிரி யோசனைகளை இதுவரை யாருமே வெளியிட்டதில்லை. அந்த வகையில் உலகுக்கே வழிகாட்டுகிறவராகத் திகழ்கிறார்!

**எ.க. தலைவர்** : இது அநியாயம். நகராட்சிப் பூங்காக்களைப் பராமரிப்பவர், நகராட்சியிடமிருந்து சம்பளம் பெறும் தோட்டக்காரர்...

**சபாநாயகர்** : தோட்டக்காரர் பெயர்களை எல்லாம் பூங்காக்களுக்குச் சூட்ட முடியாது.

**எ.க. தலைவர்** : நான் வெளிநடப்புச் செய்வதைத் தவிர வேறு வழி இல்லை.

*(மற்ற உறுப்பினர்களும் தொடர்கிறார்கள்)*

**சபாநாயகர்** : வெளிநடப்பு தேவை இல்லை. காவலர்கள் உங்கள் கையை முறுக்கி ரத்தக் கொதிப்பு உண்டாக்கி குண்டுக்கட்டாகத் தூக்கி வெளியில் போட்டு விடுவார்கள். சற்று பொறுமையாக இருங்கள், அவர்களை அழைக்கிறேன்.

*(எதிர்க்கட்சித் தலைவர் அலறிப் புடைத்துக் கொண்டு ஓட, ஆளுங்கட்சி உறுப்பினர்கள் மகிழ்ச்சியாகச் சிரித்து மேஜையைத் தட்டி ஆரவாரம் செய்கிறார்கள்.)*

கற்பனை : **சித்தார்த்**

# பணம் பண்ணலாம்



## நாலும் தெரிஞ்ச சிகாமணி!

ஒரு நண்பர்... பெயர் சிகாமணி. (வசதி கருதி இந்தக் கற்பனைப் பெயரையே தொடரில் வரும் எல்லா நண்பர்களுக்கும் வைப்போம்!)

"பெருங்காய டப்பாவில் பத்து ரூபாய் வைத்தால் கூட நாலு விஷயங்களை எடை போடணும்" என்



பார். சேமிக்கும் முன் யோசிக்க வேண்டியவை எனச் சிகாமணி குறிப்பிடும் அந்த நாலு விஷயங்கள்.

பாதுகாப்பு
மீட்புத் தன்மை
எதிரீடு
மதிப்புயர்வு

பாதுகாப்பு என்றால் என்ன என்பது நமக்கே தெரியும். முன்-பின் அறிமுகமில்லாத திடீர் நபர்கள் அல்லது நிறுவனங்களிடம் நம் பணத்தைக் கொடுத்து விட்டு, மகாநதி கமலஹாசன் மாதிரி கையைப் பிசைந்து கொண்டு நிற்கக் கூடாது.

மீட்புத் தன்மை என்பது, போட்ட முதலீடை சட்டென்று காசாக்கும் தன்மை. போன வாரம் சொன்னது போல் ஃபிக்ஸட் டெபாஸிட்டில் போட்டால் அதன் பேரில் அவசரத்துக்குக் கடன் வாங்கலாம்; அல்லது டெபாஸிட் காலம் முடியும் முன்னரே நஷ்டப்படாமல் கணக்கு தீர்த்துக் கொள்ளலாம்.

எதிரீடு. முதலீடு - பணத்தைப் போடுவது. அதிலிருந்து கிடைக்கக் கூடிய வட்டி அல்லது லாபத்தில் பங்கு போன்றவை எதிரீடு.

மதிப்புயர்வு : போட்ட பணம், வட்டி அல்லது லாபத்தில் பங்கு என்று சம்பாதித்துத் தருவதுடன், காலப் போக்கில் அந்த முதலீடை மீட்கும் போது அதன் மதிப்பும் பெருகி, போட்டதை விட கூடுதலாகப் பணம் கிடைக்கும். இதற்கு மிகச் சிறந்த உதாரணமாக முன்னணி கம்பெனி ஷேர்களைக் குறிப்பிடலாம்.

"பெருங்காய டப்பாவில் பத்து ரூபாய் போடும்போது இந்த நாலு நிபந்தனைகள் எங்கே பூர்த்தியாகுது....?" என்று சிகாமணியைக் கேட்டால் சிரிக்கிறார்.

"டப்பாவைப் பாதுகாப்பாய் ஒளிச்சு வைச்சுடுவேன்; என்னால் மட்டுமே மீட்க முடியும்; டப்பா கிடைக்கும் வரை மனைவியால் சமையலில் பெருங்காயம் உபயோகிக்க முடியாது என்பதால் அதுவும் மிச்சமாகும்; மாசக் கடைசியில் அந்த பத்து ரூபாயை எடுத்துக் காட்டும் போது அதன் மதிப்பே தனிதானே!" என்று விக ஸ்டைலில் டயலாக் வேறு!

கிடக்கட்டும்! நமக்கு நாலுந்தெரிஞ்சிருந்தாலும் மேற்படி நான்கு குணங்களும் ஒருங்கே அமையப் பெற்ற சேமிப்பு முறை என்பது, 'அழகும் குணமும் நிறைந்த குடும்பப் பாங்கான வேலைக்குப் போகும் மணமகள் தேவை....' என்று வெளியாகும் சில விளம்பரங்களைப் போல்தான்!

எனினும், ஓரளவுக்கேனும் இந்த நான்கு நிபந்தனைகளும் பூர்த்தியாக வேண்டும் என்பது சிகாமணி சிந்தனை.

சிகாமணி இதற்கென்றே ஒரு வழி வைத்திருக்கிறார். இரண்டு வைப்பு நிதிகள் ஆரம்பித்துவிட்டு ஒன்றைத் தொடாமல் வைத்திருக்கிறார். மற்றொன்றின் பேரில் கடன் வாங்கி அதைக் கொண்டு சவரன் வாங்கி பத்திரப் படுத்துகிறார். தொடாமல் இருக்கும் டெபாஸிட் 'மெச்சூர்' ஆகும் போது, அதன் ஒரு பகுதியைக் கொண்டு கடனை அடைத்து விடுகிறார். மிச்சமுள்ள

பணத்துடன் மேலும் சேர்த்து இன்னொரு டெபாஸிட் போட்டு விடுகிறார்.

''டெபாஸிட்டுக்குக் கிடைக்கும் வட்டியை விட நான் கொடுக்கும் வட்டி இரண்டு சதவிகிதம் அதிகம்தான். ஆனால், கடன் தொகையைக் கொண்டு வாங்குற சவரன் மதிப்பு, போகப் போக ஏறுமில்லையா!'' என்கிறார் சிகாமணி.

சிகாமணி, தாம் வாங்கிய பவுனை விற்று, மீண்டும் முதலீடு செய்தாரானால் இன்னும் லாபம் பார்க்கலாம். ஆனால் மனைவியின் ஐம்பதாவது பிறந்த நாளுக்கு ஐந்து பவுனில் இல்லாவிட்டாலும் மூன்று பவுனில் ஒரு சங்கிலி செய்துவிட வேண்டும் என்ற ஆசையில் அவர் சேமிக்கும் போது, இறுதி லாபம் அவரது சந்தோஷமும் திருமதி சிகாமணியின் முகத்தில் படரப் போகும் பெருமிதம் கலந்த வெட்கமும்தான்.

ஓர் அவசரத்துக்கு அந்தச் சங்கிலி கை கொடுக்கும் என்ற பாதுகாப்பு உணர்வு இரண்டு பேருக்குமே போனஸ்!

இதே போல் இரண்டு வைப்பு நிதிகளைத் திட்டமிட்டுப் போட்டுக் கொண்டு, ஷேர்கள் அல்லது டிபஞ்சர்கள் வாங்கி நல்ல லாபம் பார்க்க முடியும்.

உதாரணமாக ரிலயன்ஸ் கம்பெனியின் பங்குகளை எடுத்துக் கொள்வோம். செயற்கை இழைத் துணி தயாரிப்பதற்காக ஆரம்பிக்கப்பட்ட நிறுவனம். ''பருப்பில்லாமல் கல்யாணமா? 'பாலிஸ்டர்' இல்லாமல் பொங்கல், தீபாவளியா?'' என்று பட்டி தொட்டியெல்லாம் புதுமொழி முழங்கும் அளவுக்குப் பாலியஸ்டர் உபயோகத்துக்கு வந்துவிட்டது.

ரிலயன்ஸ்பாடு யோகம்தான்! இந்தியாவிலேயே அதிக அளவு செயற்கை இழை உற்பத்தி செய்யும் நிறுவனமாக வளர்ந்து விட்டது. தவிர, குஜராத்தில் பிரும்மாண்டமான எண்ணெய் சுத்திகரிப்பு ஆலை நிறுவும் திட்டமும் தொடங்கியுள்ளது. ஆண்டு தோறும் இந்நிறுவனத்தில் புழங்கும் தொகை (turnover) நாலாயிரம் கோடி ரூபாய்!

நாலுக்குப் பிறகு எத்தனை சைபர் என்று நாம் ஏன் மண்டையை உடைத்துக் கொள்ளணும்! நமக்குப் பத்து ரூபாய் தெரியும். அந்த எளிய தொகைக்கு வாங்கிய ஒரு ரிலயன்ஸ் ஷேரின் இன்றைய மதிப்பு சுமார் 275 ரூபாய்! கொஞ்சம் நாளைக்கு முன் அதுவே நானூறு ரூபாய் வரை விற்றது! இந்த ஷேர்களுக்குக் கிடைக்கக்கூடிய டிவிடன்டைக் கணக்கிட்டால் நாம் பெறக்கூடிய எதிரீடு வெறும் இரண்டு சதவிகிதம் மட்டுமே! ஆனால், லட்டு போல் லாபம் பார்க்க வேறு வழி இருக்கு.

நம்பகமான இடத்தில் ஃபிக்ஸட் டெபாஸிட்டுகள் போட்டு, அதன் பேரில் கடன் வாங்கி ரிலயன்ஸ் மாதிரி நிறுவனங்களின் ஷேர்களை வாங்கலாம். 'காரன்டி'யாக லாபம் தரக்கூடிய தரத்தில் டாடா, பிர்லா, சிங்கானியா, லக்ஷ்மி, முருகப்பா, டி.வி.எஸ். போன்ற நிறுவனங்கள் உள்ளன.

வாங்கிய ஷேர்களை மார்க்கெட் கனிந்து வரும்போது விற்றால், நல்ல லாபம் கிடைக்கும். லாபத்தில் இருபது சதவிகிதம் capital gains tax என்ற வரியாக ம.மோ. சிங் செலவுக்குப் போய் விடும். அப்படிப் போனாலும் தங்கும் லாபம் கணிசமானதாய் இருக்கும்.

இந்த மாதிரி ஷேர்களை வாங்கி விற்கும் போது கண்ணில் விளக்கெண்ணெய் விட்டுக் கொண்டு செய்தித்தாளில் ஷேர் பேஜைப் பார்த்தால் கூட நாம் சறுக்கிவிட வாய்ப்பு இருக்கிறது. எனவே, ஷேர்கள் வாங்கி விற்கும் தொழில்முறை ஷேர் புரோக்கர்கள் உதவி, ஆலோசனை பெற்று மார்க்கெட்டில் இறங்கலாம்.

அதையும் மீறி சில சமயம் சிக்கல் வரும். பாவம் சிகாமணி! அவர் மகள் திருமணத்தின் போது தான் ஹர்ஷத் மேத்தா விவகாரம் பெரிதாக வெடித்தது; ஷேர் மார்க்கெட் படு டல்லாகிவிட, நல்ல நல்ல ஷேர்களைக் கூட அவரால் விற்க முடியவில்லை. அமெரிக்க மாப்பிள்ளை என்பதால் அவசரக் கல்யாணம் வேறு. எப்படியோ சமாளித்து முடித்து வைத்தார்.

அது கிடக்கட்டும் - பழைய கதை. புதுசாக இப்போது சிலர் செருப்படி பட்டது போல் உலுக்கப் பட்டிருக்கிறார்கள். மார்க்கெட்டில் நுழைந்துள்ள ஒரு புது ஷூ கம்பெனியினால் விழுந்த அந்த அடி பற்றி அடுத்த வாரம்.....

# வாங்க....




### சரித்திரம் படைக்கிறார்கள்!

●● மாணவர்கள்தான் மக்காக இருக்க வேண்டும் என்பதில்லை; ஆசிரியர்களும் இருப்பார்கள் என்பதற்கு ஓர் உதாரணம், அண்மையில் நடந்த கேரள எஸ்.எஸ். எல்.சி. பரீட்சை. அதில் சரித்திரத்திற்கான கேள்வித்தாளின் முதல் கேள்வி, இந்தியா வின் முதலாவது சுதந்திரப் போராட்டம் நடந்த ஆண்டு என்ன? முப்பதியாறாவது கேள்வி, 1857-ம் ஆண்டு நடந்த இந்திய முதல் சுதந்திரப் போர் தோல்வியடைந்த தற்கு என்ன காரணம்?

### இரட்டைக் குழந்தை; இரட்டை லஞ்சம்!

●● ஆலப்புழையிலுள்ள குழந்தைகள் மற்றும் பெண்கள் மருத்துவமனையும் ஊழலில் சளைத்ததல்ல என்பது ஊரறிந்த ரகசியம். ஆயினும் ஏறுகிற விலைவாசி களுக்குத் தகுந்த மாதிரி லஞ்சத் தொகை யும் அவ்வப்போது உயர்ந்து கொண்டே இருக்க வேண்டுமா? ஏற்றிவிட்டார்கள் சம்பந்தப்பட்டவர்கள். இது அனைவருக் கும் தெரிய வேண்டாமா? பார்த்தார்கள் பொது மக்கள். மருத்துவமனைக் வெளியிலுள்ள ஒரு கடையில் புதிய லஞ்ச ரேட் விகிதங்களைப் போர்டாக எழுதி மாட்டி விட்டார்கள்! அதன்படி, முதல் பிரசவத்திற்கு லஞ்சம் ரூ. 250/- இரட்டைக் குழந்தையென்றால் ரூ. 500/- குழந்தையைக் குளிப்பாட்ட ரூ. 500/- என்று பட்டியல் நீளுகிறது! போகிற போக்கைப் பார்த்தால் லஞ்ச ரேட்டைப் பொறுத்து D.A. வேறு நிர்ணயிப்பார்கள் போலிருக்கிறது.

### புகாருக்கு மேல் புகார்!

●● திருவனந்தபுரத்திலுள்ள பேட்டை ரயில் நிலையத்தில் வந்து இறங்கினார், இடது கம்யூனிஸ்ட் எம்.எல்.ஏ.வான பாலன் வைத்தியர். அங்கிருந்த மூன்று ஆட்டோக்களில் ஒன்றை சவாரிக்கு அழைத்தார். மூவருமே வர மறுத்து விட் டார்கள். உடனே நம்பர்களைக் குறித்துக் கொண்டு போலீஸில் புகார் செய்தார். போலீஸ் விசாரித்த போது, அந்த ஆட் டோக்கள் சிட்டியில் ஓடுவதற்கான பர்மிட் இல்லாதிருந்ததும் தெரிய வந்தது. எனவே, பர்மிட் இல்லாததற்கு ஐந்நூறு ரூபாயும் சவாரி போக மறுத்ததற்கு நூறு ரூபாயும் அபராதமாக வசூலிக்கப்பட்டது. அபராதம் கட்டிய அவர்களும் இ.கம்யூ னிஸ்ட் யூனியனைச் சேர்ந்தவர்கள் என் பதால் கட்சித் தலைமையிடம் எம்.எல்.ஏ. மீது புகார் கொடுத்திருக்கிறார்கள்!

●● திடீரென்று ஒரு வெடி விபத்து ஏற்பட்டது. இடம்: திருவனந்தபுரத்தி லுள்ள தடய அறிவியல் பரிசோதனைச் சாலை. நேரம் : காலை 10.20 மணி. அப்போது யாரும் அலுவலகத்தில் இல் லாததால் உயிர்ச்சேதம் ஏற்படவில்லை. 'அப்பாடா, நல்ல வேளையாகத் தப்பித் தோம்!' என்று சம்பந்தப்பட்ட ஊழியர் கள் தங்கள் அதிர்ஷ்டத்தை நினைத்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்த வேளை யில் வெடித்தது இரண்டாவது குண்டு! காலை பத்து மணிக்கே அலுவலக நேரம் ஆரம்பித்த பிறகும் 10.20 வரை ஏன் யாரும் அலுவலகத்துக்கு வரவில்லை என்றும் வெடி விபத்து விசாரணையோடு சேர்த்து விசாரிக்கப்பட்டு வருகிறதாம்!

### நீதி கிடைக்காது இந்த நம்பருக்கு!

●● கொச்சியிலிருக்கும் உயர்நீதி மன்றத்திலுள்ள ஒரு குறிப்பிட்ட அறை யில் பணியாற்றுகிறவர்களுக்கெல்லாம் அடிக்கடி உடல் நலக் குறைவு ஏற்படத் தொடங்கியது. நீதிபதியொருவர் திடீ ரென்று நோய்வாய்ப்பட்டு இறந்தும் போக, நீதிபதிகள், வக்கீல்கள், குமாஸ்தாக் கள் என்று அனைவரும் கூடி யோசித் தனர். யோசிப்பின் முடிவில், அந்த அறையின் எண் 13 என்கிற துரதிருஷ்ட நம்பராக இருப்பதுதான் காரணம் என்று தீர்மானிக்கப்பட்டு, அதை உடனடியாக 12-அ என்று மாற்றம் செய்து விட்டார் கள்!

திருவனந்தபுரத்திலிருந்து : எஸ்.எஸ். மணி

**"SUCCESS IS THE CHILD OF TWO VERY PLAIN PARENTS; PUNCTUALITY AND ACCURACY"**

ஜெமினி ஸ்டுடியோவில் 'இரு கோடுகள்' படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்த சமயம் இடைவேளையின் போது 'floor'க்கு வெளியே அமர்ந்திருந்தேன். சௌகார் ஜானகி அவர்கள், கண்ணைக் கவரும் ஒரு அழகிய சிறுமியை என்னிடம் அறிமுகம் செய்து வைத்தார். துருதுரு வென்ற கண்கள்; அழகாக வாரி விடப்பட்ட கூந்தல்; எடுப்பான மூக்கு; வானவீதியில் உலாவிக் கொண்டிருந்த ஒரு குட்டி தேவதை, வழி தவறி என் கண்முன்னே வந்து நிற்பதாக உணர்ந்தேன்! பல படங்களில் குழந்தை நட்சத்திரமாக நடித்துக் கொண்டிருந்த ஸ்ரீதேவி தான் அவர்.



• மூன்று முடிச்சு

# நினைவ

"குழந்தையான இவள் எங்களையெல்லாம் கூட சில 'ஷாட்'டுகளில் தூக்கிச் சாப்பிட்டு விடுகிறாள்" என்று சௌகார் அன்று சொன்னதையும் இன்று ஸ்ரீதேவி அடைந்திருக்கும் அகில இந்திய நட்சத்திர அந்தஸ்தையும் நினைத்துப் பார்க்கிறேன்.

குழந்தை நட்சத்திரமாக ஸ்ரீதேவியை எனது படங்களில் நடிக்க வைக்கக்கூடிய சந்தர்ப்பம் எனக்குக் கிட்டவில்லை.

'மூன்று முடிச்சு' படத்தின் கதாநாயகிக்காகப் புதுமுகத் தேர்வு நடந்து கொண்டிருந்த நேரம். யாருமே திருப்திகரமாக அமையவில்லை. அப்பொழுதுதான் ஸ்ரீதேவியும் அவர்களில் ஒருவராக வந்தார். என்னைப் பார்த்ததும் "என்னை உங்களுக்கு நினைவிருக்கிறதா ஸார்? சௌகார் அம்மா உங்களிடம் என்னை ஏற்கெனவே அறிமுகம் செய்து வைத்திருக்கிறார்கள்" என்றதும்தான் எனக்கு ஜெமினி ஸ்டுடியோவில் நடந்த அந்த அறிமுகம் நினைவிற்கு வந்தது.

குழந்தை நட்சத்திரமாக நான் சந்தித்த ஸ்ரீதேவி ஒரு sweet seventeen ஆக என் கண் முன் நின்ற போது இவரை விட அந்த 'மூன்று முடிச்சு' நாயகிக்குப் பொருத்தமாக வேறு யார் இருக்க முடியும் என்று எண்ணிப் பார்த்தேன்.

சின்னஞ்சிறு பருவச் சிட்டாக... கமலின் காதலியாக, துள்ளித் திரியும் கன்னிப் பெண்ணாக... அதேநேரத்தில் விதியின் விளையாட்டினால் ரஜினியின் சிற்றன்னையாக, பக்குவப்பட்ட பெருந்தன்மையோடு கூடிய ஒரு தாயின் அந்தஸ்தையும் பெற்று நிற்கும் குமரியாகவும் காட்சி தர வேண்டிய அந்தக் கதாபாத்திரத்திற்கு ஸ்ரீதேவியை முடிவு செய்தேன்.

கன்னிப் பெண்ணாகச் சரி..... ஆனால் அந்தத் தாயின் ஸ்தானத்தில் நின்று பேச வேண்டிய கட்டங்களில் அவர் எப்படிப் பொருத்தமாக இருக்கப் போகிறார் என்பது முதல் ஷெட்யூல் நடந்து முடியும் வரை எனக்குச் சற்று பயமாகத்தான் இருந்தது. எடுத்தவரை 'ரஷ்' போட்டுப் பார்த்த பிறகுதான் எனக்கு நிம்மதி பிறந்தது.

அப்படிப்பட்ட ஒரு சிக்கலான கதாபாத்திரத்தில், குழந்தை நட்சத்திரமாக நடித்து, பின் பருவப் பெண் ஆனதும் முதன் முதலாக எனது இயக்கத்தில் ஒரு புதுமுகம் அந்த அளவுக்குச் சிறப்பாக நடிப்பதென்பது எளிதான காரியமல்ல.

ஆரம்ப நாட்களில் 'கல்யாணம்' என்கிற வார்த்தையைக் 'கல்லாணம்' என்று உச்சரிப்பார். "கல்யாணம்" என்று கரெக்டாகச் சொல் என்று திருப்பித் திருப்பிச் சொல்வேன். கரெக்டாகச் சொல்வதாக நினைத்துக் கொண்டு மீண்டும் மீண்டும் 'கல்லாணம்' என்றுதான் சொல்

**37**

வார்.

ஆனால் இந்தப் படம் முடிவதற்குள் அவர் கற்றுக் கொண்டு விட்ட அந்த இனிமைத் தமிழ், வளம் நிறைந்த அந்தக் குரல், அந்தக் குரலிலே இழையோடும் ஒரு ஆழம், குரலின் இனிமையில் உள்ள ஏற்ற இறக்கம் இவை யனைத்தும் எப்படியெல்லாம் அவருக்குத் துணைபோயின!

தன்னை எப்படியாவது அடைந்து விட வேண்டுமென்று நினைத்த ரஜினிக்குச் சிற் றன்னையாக வந்து ரஜினி அடிக்கடி சொல் லும் 'டீக் ஹை' என்கிற வார்த்தையையே ரஜினியிடம் திருப்பிச் சொல்லி, "போடா கண்ணா போ" என்று சொல் அம்புகளால் சவுக்கடி கொடுக்கின்ற கட்டங்களில் நாம் கேட்ட அந்தக் குரலில்தான் எத்தனை நயம்; எத்தனை வளம்; எத்தனை irony எத்தனை sarcasm; எத்தனை authority!

சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சியில் கமல ஹாசனும் ஸ்ரீதேவியும் இணைந்து பாடும் பாடலைப் படமாக்கிக் கொண்டிருந்தேன். அதுவே அவருடைய முதல் காதல் காட்சி.

# லைகள்

சற்று 'inconvenient' ஆக உணர்ந்தார்.

ஸ்ரீதேவியிடம் சற்று விளக்கமாகச் சொன் னேன். "காதல் காட்சிகளில் விரசமின்றி எந்த அளவில் நெருங்கி நடிக்க வேண்டும் என்ப தற்கு இயக்குநர் என்னவெல்லாம் சொல்லிக் கொடுத்தாலும் உனக்குப் புரியாது. முன் மாதிரியாக நீ பல படங்களைப் பார்க்க வேண்டும். இம்மாதிரியான காட்சிகளில் எப்படி நடிக்க வேண்டும் என்று சில படங் கள் கற்றுக் கொடுக்கும்; எப்படியெல்லாம் நடிக்கக் கூடாது என்று சில படங்கள் கற்றுக் கொடுக்கும்" என்று நான் சொன்னபோது ஸ்ரீதேவி சிரித்து விட்டார்.

"படம் பூராவும் கதாநாயகனின் தோளி லும் மார்பிலும் புதைந்து கிடக்கும் கதா நாயகிகளை விட, எப்பொழுது ஒருவருக் கொருவர் தொட்டுக் கொள்வார்கள் என்று ரசிகர்களை எதிர்பார்க்க வைக்கும் அள வுக்கு அமைகின்ற காதல் காட்சிகள்தான் என்றைக்கும் மனத்தில் நிற்கும். எல்லாப் படங்களையும் பார்; சில இந்திப் படங் களைப் பார்த்துவிட்டு அவற்றை மறந்துவிடு.

## கே. பாலசந்தர்

வேறு சில நடிகைகளின் நடிப்பைப் பார். அவர்கள் நடிப்பிலிருந்து எந்தெந்த அம் சங்களை inspiration ஆகக் கொள்ள வேண்டு மென்று நீயே முடிவு செய்து கொள்."

சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சியருகில் நான் கொடுத்த இந்த அறிவுரைகள் ஏதோ நேற்று தான் நடந்தது போல் தோன்றுகிறது.

ஒவ்வொரு 'ஷாட்' எடுத்து முடிந்ததும் தன் தாயின் அருகே செல்வார். தனக்காகப் போட்டிருக்கும் நாற்காலியில் உட்கார மாட் டார். தன் தாயின் மடியில் போய் அமர்ந்து கொள்வார். சாப்பாட்டு இடைவேளையின் போது பார்த்தால் அவருடைய தாய்தான் அவருக்குச் சோறு ஊட்டிக் கொண்டிருப் பார். "இந்தக் குழந்தையோடு காதல் காட்சி நடிக்கச் சொல்கிறீர்களே?" என்று கமல் வேடிக்கையாகக் கேட்டார்!

'மூன்று முடிச்சு' படத்தில் நடித்து முடித்த பிறகு மளமள வென்று பல படங்களில் கதாநாயகியாக நடிக்கத்



• வறுமையின் நிறம் சிவப்பு

தொடங்கி, தமிழிலும், தெலுங்கிலும் ஒரே நேரத்தில் மிகவும் busyயாகி விட்ட ஸ்ரீதேவியின் திறமை, வளர்ச்சியைக் கண்டு நான் வியந்தேன்.

Punctuality, accuracy இவை இரண்டு குணங்களுமே அவரது இமாலய வெற்றிக்கு உறுதுணையாக நின்றன.

தமிழ், தெலுங்கு, மலையாளம் என்று டஜன் கணக்கில் பல படங்களில் ஒரு சுற்று சுற்றி விட்டு ஸ்ரீதேவி மீண்டும் எனது இயக் கத்தில் நடிக்க வந்தது 'வறுமையின் நிறம் சிவப்பு' படத்தில்தான்.

'சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சி'யருகில் நடிக்கத் தொடங்கிய அந்த ஸ்ரீதேவி எங்கே? சொன்ன மாத்திரத்திலேயே புரிந்துகொண்டு அனாயாச மாக நடித்துவிடும் 'வறுமையின் நிறம் சிவப்பு' ஸ்ரீதேவி எங்கே? இடைப்பட்ட காலத்தில்

தம்மை எந்த அளவிற்குப் புடம் போட்டத் தங்கமாக ஆக்கிக் கொண்டிருக்கிறார் என்பதை நினைக்கவே பெருமையாக இருந்தது. முதன் முதலில் எப்படி நடிக்க வேண்டும் என்று கற்றுக் கொடுத்த என் கண்முன்னே ஒரு கலாப மயில் கனி நடனம் புரிவதைக் கண்டேன்.

Maturityயும் திறமை வளர்ச்சியும் பெற்ற நடிக நடிகையரிடம் நான் அதிக ஒத்திகைகள் கேட்பதில்லை.

'George Cuckor' என்கிற பிரபல இயக்குநர் சொன்னார்.

"You can rehearse upto a certain point; but not too far."

அதிகமான ஒத்திகைகள் கொடுக்கக் கொடுக்க நடிகர்கள் தங்களுடைய முழுத் திறமையையும் வெறும் ஒத்திகைகளில் செலவழித்து விடுவார்கள். ஒத்திகைகளிலேயே அவர்களது மின்சாரத் தாக்கமும், அந்த fireம் தீர்ந்து போய் விட, 'take' என்று வரும் போது, 'spontaneity' என்கிற, புறத்தூண்டுதலில்லாத - தன்னியல்பான அந்த வெளிப்பாடு கிடைக்காமல், இயந்திரகதியான நடிப்பு வெளிப்பாட்டைத்தான் சில நடிகர்களிடமிருந்து அடைய முடிகிறது.

ஆகவேதான் இந்த விஷயத்தில் நான் மிகவும் கவனமாக இருப்பேன்.

'அதிகமான ஒத்திகைகள் செய்து பார்க்காதே' என்று கமல், ஸ்ரீதேவி போன்றவர்களிடம் அடிக்கடி 'வறுமையின் நிறம் சிவப்பு' படப்பிடிப்பின் போது நான் சொல்லியதுண்டு.

ஸ்ரீதேவியின் திறமையை வீணாக்கும் வகையில் வெறும் glamour பாத்திரங்களில் மட்டுமே அவரை நடிக்க வைத்தபோதெல்லாம் நான் வருத்தப்பட்டதுண்டு.

"அவருடைய எதிர்காலம் இன்னும் எத்தனையோ அற்புதங்களை நமக்கு அடையாளம் காட்டவிருக்கிறது" என்று 1980ல் நான் பேசும் படத்தில் ஒரு கட்டுரையில் குறிப்பிட்டிருந்தேன். இந்தி திரைப்பட உலகில் நுழைந்து அகில இந்திய நட்சத்திரமாக மாறி அதிலும் number one என்கிற இடத்தை ஸ்ரீதேவி அவர்கள் அடைந்த விஷயங்களெல்லாம் எல்லோரும் அறிந்ததே.

மூன்று முடிச்சின் போது நான் கண்ட ஸ்ரீதேவியின் இன்றைய பரிணாம வளர்ச்சியை நினைத்துப் பார்க்கிறேன்.

"புகழ் சிலரின் மீது திணிக்கப்படுகிறது; அதையே பெருமுயற்சியின் பலனாகச் சிலர் அடைகிறார்கள்" என்கிற ஆங்கில மேற்கோளின் இரண்டாவது வகையைச் சேர்ந்தவர் அவர்.

ஒரு ஸ்மிதா பாட்டீல், ஒரு ஷபானா ஆஸ்மீ, ஒரு ஜெயாபாதுரி, ஒரு ஹேமமாலினி இவர்கள் எல்லோருடைய ஓர் அபூர்வமான கலவைதான் ஸ்ரீதேவி என்கிற இந்தக் கலைஞர் என்பதை வடக்கத்திக்காரர்கள் உணர்ந்தார்கள்.

பொதுவாகக் குழந்தை நட்சத்திரங்கள் வளர்ந்து பெரியவர்களாகும் போது, வெற்றி பெறுகின்ற நட்சத்திரங்களாக வருவதில்லை. எனக்குத் தெரிந்து இரண்டு பேர்தான் இதற்கு விதிவிலக்கு. ஒருவர் கமலஹாசன். மற்றொருவர் ஸ்ரீதேவி.

இந்தியில் 'நம்பர் ஒன்' என்கிற ஸ்தானத்தை அடைந்தபோது ஒருமுறை அவரைச் சந்தித்தேன். எனது வீட்டிற்கு வந்திருந்தார்.

இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும் மூன்று முடிச்சின் போது நான் பார்த்ததை விட அன்று நேரே பார்த்தபோது எத்தனை cuteஆக மெலிந்து காணப்பட்டார்! பெண்களின் அழகு என்பதற்கு நம்மவர்களின் அளவுகோல்: உடல் பூசினாற்போல் காணப்பட வேண்டும். ஆனால் வடக்கத்திக்காரர்களுக்கு அழகின் அளவுகோல் வேறு. கழுத்துப் பட்டை எலும்புகள் வெளியே தெரிய வேண்டும். அந்த அளவுகோலுக்குத் தம்மைத் தயார்ப்படுத்திக் கொண்டிருந்தார்.

வடக்கத்தி இயக்குநர்கள் மிகவும் அதிர்ஷ்டக்காரர்கள்! ஹேமமாலினி சகாப்தத்தைத் தொடர்ந்து ஸ்ரீதேவியின் சகாப்தம் வந்ததில் தென்னிந்திய திரைப்படத் துறையைச் சேர்ந்த எங்களுக்கெல்லாம் பெருமைதான்.

என்னிடம் அடிக்கடி சில நண்பர்கள் கேட்பார்கள். "ஸ்ரீதேவியை வைத்து மீண்டும் ஒரு தமிழ்ப் படம் நீங்கள் ஏன் செய்யக் கூடாது" என்று.

"நீங்கள் சொன்னால் ஸ்ரீதேவி மீண்டும் தமிழ்த் திரைக்கு வர மாட்டார்களா?" என்று சிலர் சொல்வார்கள்.

"If an actor or an actress you have created, reaches the top as super star, he or she is an artiste lost to you" என்று அவர்களிடம் நான் சொல்வேன்.

இதைவேதான் "A friend in power is a friend lost" என்று Henry Brooks Adams சொன்னார்.

(தொடரும்)

படங்கள் உதவி :
**ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்**

---

**அட்டையில் தர்பூசணி 'குடிப்பவர்' கார்கி (Gargi);**
**வண்ணப்படம் : யோகா**

# பிரிவு

**பிரித்திவ்**

சந்திரசேகர் வந்து எதிரே அமர்ந்தார். இனி சந்திரசேகர்தான் மானேஜர்.

கிருஷ்ணமூர்த்தி நிமிர்ந்து பார்த்தார். ''சாயங் காலம் மூணு மணிக்கு 'ஸெண்டாஃப்'. ஞாபகப் படுத்தலாம்னு வந்தேன்....'' - சந்திரசேகர்.

''ம்....''

வேறு என்ன சொல்வதென்று அவருக்குத் தெரியவில்லை. சந்திரசேகருக்கும் மேற்கொண்டு



என்ன சொல்வதென்று புரியவில்லை.

கிருஷ்ணமூர்த்தியே தொடர்ந்தார்.

''இது ஒரு சம்பிரதாயம். அதனால என்னாலே இதை மறுக்க முடியலே. சும்மா ஸ்டாஃப் மாத்திரம் வச்சுக்கலாமா?''

''இல்லை சார், தொழிலாளர்கள்தான் ரொம்ப ஈடுபாட்டோட இருக்காங்க. சொன்னாலும் கேட்க மாட்டாங்க. பாராட்டு விழாவும், இந்தப் பிரிவு உபசார விழாவும் எல்லா இடத்திலேயும் நடக்கிறதுதானே சார். உங்களுக்கு மட்டும் என்ன புதுசா?'' என்றார் சந்திரசேகர்.

சும்மா அமர்ந்திருந்தார் கிருஷ்ணமூர்த்தி.

''சரி சார். அப்போ நான் மத்த ஏற்பாடுகளைக் கவனிக்கிறேன்.'' சொல்லிவிட்டு நகர்ந்தார் சந்திர சேகர்.

அறையிலே தனிமை யாக்கப்பட்டார். மனம் எதை யெல்லாமோ யோசித்தது.

''சார் யூனியன் ஆட்கள் வந்திருக்காங்க'' என்று முத்து வந்து சொன்னான்.

''வரச் சொல்லுங்க'' என்றார் கிருஷ்ணமூர்த்தி.

''வணக்கம் சார்.''

''வணக்கம். உட்காருங்க.''

யூனியன் தலைவர், செயலாளர், பொருளாளர் எல்லோரும் வந்திருந்தனர். எந்த யூனியன் நபருக் கும் இவர் மீது நல்ல எண்ணம் கிடையாது. அனேகமாக வாரம் ஒரு மெமோ யாருக்காவது தந்துவிடுவார். மெமோவை வாங்கின மறு நிமிடம் தொழிலாளி யூனியன் வாசலில்தான் போய் நிற் பான். யூனியன் தலைவர்களுக்கு அதன் பிறகு தலைவேதனைதான். யார் சிபாரிசுக்கு வந்தாலும் காதில் போட்டுக் கொள்ள மாட்டார். தலைவரே சொன் னாலும் சரி. ''நல்லாயிருப்

பீங்க. இதிலே நீங்க தலையிடாதீங்க. ஒழுக்கம் எனக்கு ரொம்ப முக்கியம். இதிலே கொஞ்சம் நான் அசட்டையா இருந்திட்டாலும் என்னாலே அப்புறமா இந்த பேஃக்டரியைச் சரியா ரன் பண்ண முடியாது'' என்று சொல்லிவிடுவார்.

''என்ன சார் எதுவும் பேசாம இருக்கீங்க? ரிட்டயர்டு ஆறோமேன்னு வருத்தமா?'' தலைவர் ஜெயசீலன்தான் கேட்டார்.

என்ன அர்த்தத்தில் தலைவர் சொன்னார் என்று புரியவில்லை கிருஷ்ணமூர்த்திக்கு.

''இதிலே எதுக்கு வருத்தம்? வயசானா 'ஓய்வு' ஒரு விதிதானே?''

''விதிதான். ஆனாலும் மனசு உடன்படாதுன்னுதான் கேள்விப்பட்டிருக்கேன். அதனால தான் சொன்னேன்.''

''விதி விலக்குகளும் இருக்கலாம் இல்லையா?''

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தலைவருக்குத் தெரியவில்லை.

'ம்' என்று மட்டும் சொன்னார்.

பிறகு சிறிது யோசித்துவிட்டு தயக்கத்துடன் சொன்னார்: ''சார்.... அப்புறம் இந்த கருப்பசாமி கேசு....''

''அதை இன்னமே புது மேனேஜர் பாத்துப் பாரு.''

''இருந்தாலும் நீங்க கொஞ்சம் அவர் கிட்டே சொல்லிட்டுப் போனா பரவாயில்ல.''

''பரவாயில்லதான். ஆனா கருப்பசாமி ஷிப்ட் நேரத்திலே தூங்கினது தப்பில்லையா?''

''ம்..... பாவம் சார் நீங்க. உலக நடப்பே இன்னும் தெரியலே. அதுக்குள்ள இப்படி கோபிக்கறீங்க. ஷிப்டிலே அவனவன் வெளியிலே போயி கொலையே பண்ணறான். நீங்க என்னடான்னா....''

பேச்சை வளர்க்க கிருஷ்ணமூர்த்தி விரும்பவில்லை.

புரிந்து கொண்டு அவர்கள் வெளியேறினார்கள்.

மாலை மூன்று மணி.

கடவுள் வாழ்த்துக்குப் பின் ஒவ்வொரு உயர் அதிகாரியும் பேசினார்.

அத்தனை பேருமே கிருஷ்ணமூர்த்தியை மனித நேயம் தெரியாதவர் என்று நேரிடையாகவே கூறினார்கள்.

கிருஷ்ணமூர்த்திக்கு என்னமோ போல இருந்தது. மனித நேயம் பற்றிப் பேசும் இவர்களுக்கு மட்டும் இங்கிதம் தெரிகிறதா என்ன? ஓய்வு பெறும் ஒரு மனிதனை சந்தோஷத்துடன் இல்லாவிட்டாலும், சகட்டு மேனிக்குத் திட்டாமலாவது அனுப்பலாமே.

''தொழிலாளர் சார்பாக கருப்பசாமி பேசுவார்.''

கிருஷ்ணமூர்த்திக்கு ஏதோ நெருடியது. அதிகாரிகளே இதுதான் சாக்கு என்று கோபங்களைக் கொட்டித் தீர்த்து விட்டார்கள். இவன் என்ன பேசப் போகிறானோ தெரியலையே என்று யோசித்தார். நேற்று ஷிப்ட்டில் தூங்கி மாட்டிக் கொண்டவன் இவன்தான்.

கருப்பசாமி மைக்கைப் பிடிக்கவும் தொழிலாளர் பக்கமிருந்து கை தட்டல் காதைப் பிளந்தது. கண்டிப்பாக நம்மைக் குதறிவிடுவான் என்று கிருஷ்ணமூர்த்திக்குக் கெளளி அடித்தது.

''வணக்கம். எனக்குச் சரியாப் பேசத் தெரியாது. ஐய்யா அவங்க இன்னைக்கு ஓய்வு பெறுறாங்க. இது ரொம்ப முக்கியமான நாள். ஐய்யா மனசுக்குள்ள திரும்பத் திரும்ப வந்து போற நாள். ஆனா நம்ம அதிகாரிங்க எல்லாருமே படிக்காதவங்க மாதிரி பேசிட்டாங்க. நான் படிக்காதவன் எனக்கே தெரியுது. இவங்க பேசினது எதுவுமே சரி கிடையாது. ஐயா கொஞ்சம் கோபமா வேலை வாங்குவாரு. ஏன் நான் ஷிப்ட்டிலே நேத்துத் தூங்கி மாட்டிக்கிட்டேன். நான் செஞ்சது தப்புதான். நல்லாவே தெரியும். ஆனாலும் நம்ம லேபருக்கே உண்டான திமிரு. யூனியன்லே சொன்னேன். அவங்க கூட சார்கிட்டே கேட்டாங்க. சண்டை போட்டாங்க....''

கூட்டம் கை தட்டியது.

''நிழல் அருமை வெய்யில்லதான் தெரியும்னு சொல்வாங்க. அது போல சார் ரிட்டயர்டு ஆறாரு அப்படின்னு சொல்லவும்தான் சாரோட உண்மை சொரூபம் தெரியுது. சாரின் கண்டிப்பில் ஒரு தந்தையின் கண்டிப்பு இருக்கும். மனத்தின் ஒரு ஓரத்தில் ஈரம் தெரியும். இது அத்தனையும் எனக்குத் தெரியும். ஆனாலும் நான் யூனியனிடம் போய்ச் சொன்னேன். தந்தை மகனைக் கண்டித்ததும் ஓடிச் சென்று தாயிடம் சொல்வது போல. இங்கே யாருக்கும் யாரிடமும் துவேஷம் இல்லை. சார் நீண்ட ஆயுளுடன் எல்லா நலமும் பெற்று வாழ வேண்டும்....'' என்று சொல்லி விடை பெற்றான் கருப்பசாமி.

சம்பிரதாயமாக எல்லோரும் கை தட்டினார்கள். கிருஷ்ணமூர்த்தி கண் கலங்கினார்!



## அடுத்த இதழ்....

## ●● ஸ்போர்ட்ஸ் ஸ்பெஷல்!

# பாலம்



●● குடிசைத் தொழிலாக வாசனைப் புகையிலை, பாக்குத்தூள், கிளீனிங் பவுடர், வாசனைத் தைலம், சுக்கு காப்பி பவுடர் போன்றவை தயார் செய்து விற்பனை செய்ய விரும்புவோர் தொடர்பு கொள்க :

*- பி.ஆர். கிருஷ்ணமூர்த்தி,*
*K.5, ராஜீவ் அபார்ட்மெண்ட்ஸ்,*
*பொன்னேரி - 601 204.*

●● சென்னை பல்கலைக் கழகம் 3-ம் ஆண்டு சரித்திரம் (TM) அஞ்சல் வழி 1. சீன சரித்திரம் 1800 முதல் 1970 வரை, 2. அனைத்துப் பாடங்களின் (மூன்றாம் வருடத்திய) சென்ற ஆண்டு கேள்வித் தாள்கள் கைவசம் வைத்திருப்பவர்கள் கொடுத்து உதவினால் நன்றி.

**- G. Raju,**
**Central Admn. Tribunal,**
**Com. Complex (BDA)**
**Indira Nagar,**
**BANGALORE - 560 038.**

●● இறால் குஞ்சு பொரிப்பகத் துறையில் ஈடுபட்டுள்ளேன். தொழில்நுட்பம் மற்றும் புத்தகங்கள் தேவை. தக்க விலை தரப்படும்.

***- P. L. முத்து,***
***S/o M.P. பழனியப்பன்,***
***வெள்ளாளத் தெரு,***
***குத்தாலம் - 609 801.***

●● வீர சைவ லிங்காயத்துப் பிரிவின் தெலுங்கு ஜங்கம், 18 குலம், 108 கோத்திரம் ஆகியவை பற்றிய தகவல்களையும் சடங்கு சம்பிரதாயங்கள் பற்றியும் தகவல்கள் பெற விரும்புகிறேன். சன்மானம் உண்டு.

*- செ. செல்வராஜ்,*
*73, காய்கறி மார்க்கெட் ரோடு,*
*பவானி - 638 301.*

●● சென்னை பல்கலைக் கழகம் அஞ்சல் வழி கல்வியில் B.Com., (1982 - 1985) 20 பாட நூல்கள் அனைத்தும் வைத்திருப்பவர் வழங்க வேண்டுகிறேன். சன்மானம் தருகிறேன்.

*- ஆ. ஜான் கென்னடி,*
*155 A, NSK சாலை,*
*முத்துப்பேட்டை - 614 704.*

●● நமது கிராமங்களில் பட்டுப் பூச்சி தொழிலின் நிலவரம் என்ன? பெரிய அளவில் நடத்த முடியுமா? பயன்தரும் தொழிலா? விவரங்கள் அறிந்தோர் தொடர்பு கொள்ளவும்.

*- வெ. பத்மாவதி,*
*7, தண்ணீர் தொட்டி வீதி,*
*V.R. புரம் மேடு,*
*உப்பிலிபாளையம் (அஞ்சல்),*
*கோவை - 641 015.*

●● பிஎஸ். ராமையா எழுதிய "மணிக்கொடி காலம்'' புத்தகம் பிஎச்.டி. ஆய்வுக்குத் தேவைப்படுகிறது. விலைக்கு வாங்கத் தயார்.

*- அ. க. கிருஷ்ணன்,*
*4, ஏ. ஏ. ரோடு,*
*வியாசர் நகர்,*
*சென்னை - 39.*

●● கேபிள் டீவி பற்றி தொழில் நுட்பம் தெரியும். புதிதாக இத்தொழிலை மேற்கொள்வோர் அல்லது ஏற்கெனவே செயல்படுத்தி வருவோருடன் working partner அடிப்படையில் உதவத் தயார்.

*- வி. வேணுகோபால்,*
*47/5, ஹட்கோ காலனி,*
*பீளமேடு, கோவை - 4.*

●● கிருபானந்தவாரியார் சுவாமிகள் எழுதி வெளியிட்டு வந்த "திருப்புகழ் அமிர்தம்'' கதை இதழ்கள் அனைத்தும் ஆய்வுக்காகத் தேவை. அன்பளிப்பாக அல்லது சன்மானம் தந்து பெற்றுக் கொள்கிறேன்.

*- வலையப்பேட்டை*
*ரா. கிருஷ்ணன்,*
*5, டாக்டர் பெசண்ட் ரோடு,*
*சென்னை - 600 005.*

●● அரிசி சேமியா தொழில் ரீதியில் தயாரித்து விற்பனை செய்ய ஆவல். செய்முறை ஆலோசனைகள், தொழில் தொடங்க யோசனைகள் தேவை.

*- சித்ரா நாகராஜன்,*
*21, என்.ஜி.ஓ. காலனி,*
*திண்டுக்கல் - 624 009.*

**(பாலம் மூலம் இணையும் கல்கி வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது.**
**- ஆர்.)**


• இந்திய... • ...விஜயம் குறித்து

● பா. ஆம்னி, பொள்ளாச்சி.
? சினிமா - அரசியல் இவற்றைத் தொடாத பத்திரிகைகள் உண்டா?
! உண்டு. ஆனால் வாங்கிப் படிப்போர்தான் இல்லை!

● ஜி. இந்திரா, திருச்சி.
? "கோடிக்கணக்கில் செலவழித்துப் பெரிய திட்டங்கள் அமுலாவது பற்றி மக்களுக்குத் தெரிவிக்க விளம்பரம் தேவைதான்" என்று முதல்வர் கூறியிருப்பது பற்றி...?
! உண்மையிலேயே திட்டங்கள் மக்களைச் சென்றடைகின்றன என்ற நிலையில் விளம்பரங்கள் தேவையில்லை. ஆனால் அறிவிப்போடு நின்று விடும்போது விளம்பரங்கள் மூலம்தானே மக்களை மயக்க முடியும்!

● ஏ. சுவாமிநாதன், பிச்சாண்டார் கோயில்.
? "நாய் போல நன்றியுள்ளவனாக உழைப்பேன்" என்று கருணாநிதி கூறியுள்ளதைக் கவனித்தீரா?
! த்லொ... த்லொ...

● சோ. இராமு, செம்பட்டி.
? "ஜூன் மாதத்துக்குள் ஜெயலலிதா உள்ளாட்சித் தேர்தலை நடத்தினால் அரசியலை விட்டே விலகத் தயார்" என்று வாழப்பாடி ராமமூர்த்தி அறிவித்துள்ளது பற்றி...?
! வாழப்பாடி அப்படியெல்லாம் அரசியலை விட்டுப் போவதை ஜெ. விரும்ப மாட்டார்!

● இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.
? "எங்கள் புரட்சித் தலைவி நின்றால் பேரணி; நடந்தால் மாநாடு" என்று அமைச்சர் கண்ணப்பன் கூறியுள்ளாரே?
! உட்கார்ந்தால் ஊழல்; குனிந்தால் கொள்ளை; நிமிர்ந்தால் விபத்து; வாய் திறந்தால் வசை; பிடி தளர்ந்தால் புலிகள் தப்பி ஓட்டம்!

● தென்றல் ப்ரியன், மேலூர்.
? 'ஜெ' முதல்வராக இருப்பதற்கும் 'க' முதல்வராக இருந்ததற்கும் என்ன வித்தியாசம்?
! 'ஊ'வில் நிறைய வித்தியாசம்.

● ச. ஆ. கேசவன், இனாம் மணியாச்சி.
? நம் நாட்டில் மக்களுக்குச் சுலபமாகக் கிடைப்பது எது?
! வாக்குறுதிகள்!

● சுந்தர் அழகேசன், திருச்சுழி. ☐
? இலங்கை அதிபர் சந்திரிகா, அமெரிக்க முதல் குடிமகள் திருமதி கிளிண்டன் ஆகியோரின் இந்திய விஜயம் குறித்து....?
! முன்னவர் வாங்கிக் கொள்ளும் நிலையில் இருப்பவர்; பின்னவர் கொடுக்கின்ற நிலையில் உள்ளவர். ஆயினும் முன்னவருக்குத் தரப்பட்ட முக்கியத்துவம் பின்னவருக்குக் காண்பிக்கப்படவில்லை என்பது விசனிக்கத்தக்கது. என்னதான் சொல்லுங்க, ராவுக்கு ராஜதந்திரம் போதாது!

● வை. வேங்கடேசன், விழுப்புரம்.
? பா.ம.க. தலைவர் ராமதாஸை அவரது மனைவியின் வேண்டுகோளுக்கு இணங்கி விடுதலை செய்ததாக முதல்வர் ஜெ. அறிக்கை...?
! 'அப்படி நான் கேட்கவில்லை; அத்தகைய வேண்டுகோள் விடுத்து என் கணவருக்கு நான் இழுக்குத் தேடித் தரமாட்டேன்' என்று திருமதி ராமதாஸ் பதில் அறிக்கைவிட; 'நேரடியாகக் கேட்கவில்லை; சுற்றி வளைத்துத்தான் திருமதி ராமதாஸ் வேண்டுகோள் விடுத்தார்' என்று எஸ்.டி.எஸ். மழுப்பல் அறிக்கைவிட, 'நேம்' திருமதி ராமதாஸுக்கு 'ஷேம்' ஜெக்கு.

● பாலசுப்பிரமணியன், சென்னை - 52.
? தமிழக முதல்வர் மீது வழக்குத் தொடர கவர்னர் அனுமதி

☐ ரூ. 25 பரிசு பெறுபவர் :
சுந்தர் அழகேசன்,
64/2, வடக்குரத வீதி,
திருச்சுழி - 626 129
காமராசர் (மா.வ.)


• "(ஜெ) நின்றால் பேரணி" • மழுப்பல் அறிக்கை

## நீங்கள் கேட்டவை - தராசு

அளித்திருப்பது எதைக் குறிக்கிறது?

! சென்னா ரெட்டிக்கு முதுகெலும்பு இருப்பதையும் பிரச்னையிலிருந்து நழுவிக் கொண்டு வெண்டைக்காய் பாலிஸியைக் கையாளும் ராவுக்கு 'தில்' இல்லாததையும் உணர்த்துகிறது.

● பிரபா லிங்கேஷ், மேலகிருஷ்ணன்புதூர்.

? ஒரு பண்பட்ட அரசியல்வாதியின் இலக்கணம் எதுவாக இருத்தல் வேண்டும்?

! 'உன் கருத்திலிருந்து நான் மாறுபடுகிறேன்; ஆயினும் உன் கருத்தை வெளியிடும் உரிமையை நான் மதிக்கிறேன்' என்ற பண்பினைக் குறிப்பாகச் சட்டமன்றத்தில் காண்பிக்க வேண்டும்.

● டி. ஆர். பாலசந்தர், திருநெல்வேலி.

? இன்றைய தமிழக சட்டசபை எப்படிங்க நடைபெறுகிறது?

! எதிர்க்கட்சியற்ற ஏக கட்சி ஜனநாயகம் போல.

● அன்பின் செபா, கடையல்.

? அரசியல்வாதிகள், அதிகாரிகள் லஞ்சம் வாங்கும்போது, குடிமகன் பணமோ பொருளோ பெற்றுக் கொண்டு வாக்களிப்பது இன்றைய சூழலில் தவறாகுமா?

! ஒருவர் செய்யும் குற்றம் இன்னொருவர் குற்றம் புரிய லைசென்ஸ் அளித்ததாகாது; அதை நியாயப்படுத்தவும் முடியாது.

● இராம கல்யாண், வடவள்ளி.

? எங்கள் சட்டமன்றத் தலைவன் எஸ்.ஆர்.பி. கைகளை முறுக்கி, புரட்டி அடித்த் பிறகு கூட, "கட்சித் தலைவர் ராவைக் கேட்டுத்தான் முடிவு எடுப்போம்" என்று கூறிய இந்த விசுவாசம் வேறு எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களுக்கு இருக்கிறது?

! இந்த விசுவாசத்துக்கு அருகதை உள்ளவராக ராவ் நடந்து கொள்ளவில்லை என்பதுதான் துரதிர்ஷ்டம்!

● கவி. இளங்கதிரவன், கோவை.

? யாருக்குப் பயப்படக் கூடாது?

! 'கத்தி முனை காட்டியும் பெட்ரோல் ஊற்றிக் கொளுத்தியும் கொள்ளை அடிக்க வருகிறவர்களிடம் கூட பயப்படக் கூடாது; கத்திக் குத்துப்பட்டாலும் அஞ்சாமல் போராட வேண்டும்' என்று பாங்க் ஆஃப் இந்தியா ஆயிரம் விளக்கு கிளையில் பணியாற்றுவோர் நிரூபித்திருக்கிறார்கள். அந்தத் துணிவு பாராட்டுக்குரியது.

● என்.ஆர்.சுப்பிரமணியன், பூனாம்பாளையம்.

? "மத்திய பட்ஜெட் உப்பு சப்பில்லாத பட்ஜெட்" என்று எதிர்க்கட்சியினர் விமர்சித்துள்ளனரே?

! தேர்தலை முன்னிட்டுச் சமுதாய நலத்திட்டங்களையும், பொருளாதார வளர்ச்சியை முன்னிட்டு வரிச் சலுகைகளையும் உள்ளடக்கிய பட்ஜெட் இனிப்பாகப் பலருக்கும் இருக்கும்போது


• முதுகெலும்பு உண்டு


• 'தில்' இல்லை.

உப்பு சப்பு எப்படி எதிர்பார்க்க முடியும்? கவலைக்குரிய விஷயம் மொத்த வருவாயில் 52,000 கோடி (அதாவது 51.5%) அரசு வாங்கியுள்ள கடன்கள் பலவற்றுக்கும் வட்டி தரவே போய்விடுகிறது என்பதுதான். இதில் கவனம் செலுத்தினாலொழிய முன்னேற்ற வேகத்துக்கு முட்டுக்கட்டைதான் போடப்படும்.


• விலகத் தயார்....


• நன்றியுள்ளவனாக...


• விசுவாசம்


• 'விளம்பரம் தேவைதான்'

முதல்வர்மீது வழக்குத் தொடர கவர்னர் அனுமதி எதைக் குறிக்கிறது?

# ஹில் ஸ்டேஷன் ஜில்ஸ்!

"டார்ஜிலிங்... நாம ஹனிமூனுக்கு டார்லிங் போகலாமா?"

"ஹனிமூன்'னு நினைச்சாலே நீங்க ரொம்ப டென்ஷனாயிடுறீங்க... போங்க!"

"நான் கூட சம்மருக்கு மலைக்குப் போய் நாலு நாள் தங்கினேன். அங்கேயும் வெயில் தாங்க முடியலை."

"அப்படி எங்கே போனே?"

"திருவண்ணாமலைக்குத்தான்."

"ஒருநாள் ரூம் வாடகை ஐந்நூறு ரூபாயா?!"

"சீஸனிலே அப்படித்தான் சார்."

"அடுத்த தடவையாவது சீஸன் இல்லாதப்போ வரேன். அது சரி, இங்கே சீஸன் எப்போ?"

"நீங்க எப்போ வரீங்களோ அப்போ."

"இந்த அற்புதமான சுத்தமான மலைக் காற்றுக்காகவே நமக்கு ஒவ்வொரு வருடமும் இங்கே வரத் தோணுது இல்லே?"

"ஆமாமாம். சீக்கிரமா இன்னொரு சிகரெட் பாக்கெட் எடு."

"சிம்லான்ற பேச்சையே எடுக்காதீங்க. நினைச்சாலே உடம்பெல்லாம் நடுங்குது."

"ஏன் சார், குளிர் தாங்காதா உங்களுக்கு?"

"அதில்லே. சிம்லாவிலேதான் என் மாமியார் வீடு இருக்கு."

— ஜாலி, குல்லூ

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka